# தேசீய கீதம்









சுத்தானந்த பாரதியார்



சக்தி நிலையம் புதுவை

எந்தாய் வாழ்க!



யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின்

# தேசிய கீதம்.

[115 ஆவேசப் பாடல்கள்]



பாரத சக்தி நிலையம்

புதுச்சேரி,



[விலை 1—8—0.

# பொருளடக்கம்.

# பதிப்புரை

1928-ம் ஆண்டு வரையில் யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியார் தீவிரமான தேசசேவை செய்தார். எழுத்தும் பேச்சுந்தவிர, நிலேயான கிராம சேவையும் செய்தார். தமிழகம் முற்றும் சுற்றிக் காங்கிரஸ் பிரசாரம் செய்தார். திலகர் காந்தி, ஐயர், அரவிந்தர் ஆகிய பெரியாரைப் பின்பற்றினர் இவரது தேசீயகீதங்களைத் தமிழ்க் குருகுலத்தில் இரவுதோறும் பாடக்கேட்டு, வீரவிளக்கு வ. வே. சு. ஐயர் பரவசமானதுண்டு. அவற்றை அச்சிட முயன்றுகொண்டிருந்த சமயம், ஐயர் அருவியில் மறைந்தார். ஐயருக்குப் பிறகு, பாலபாரதி, சமரஸ போதினி, தமிழ் ஸ்வராஜ்யா ஆகிய இதழாசிரியராகவும், பாமணி, பாலேயூர், திருவிடைமருதூர் முதலிய இடங்களில் கிராம ஊழியராகவும் சுத்தானந்தர் தேசத்தொண்டு செய்தார். 1927-ல் சென்னையில் நடந்த காங்கரஸிற்குப் பிறகு, இவர் தமிழகமெங்கும் சுற்றிக் காங்கரஸ் பிரசாரம் செய்தார். அக் காலங்களில் இவர் தமது பிரசாரங்களுக்கென்றே பாடிய பாடல்கள் அனந்தம்: கதர், மதுவிலக்கு, ஹரிஜன சேவை, சமுதாய ஒற்றுமை, கல்வி, சுகாதாரம், கைத்தொழில், கலே, சன்மார்க்கம் ஆகிய எல்லாத் துறைகளிலும் இவர் தொண்டு செய்தார், அனைத்திலும் ஆன்மவொளி வீசவேண்டுமென்பதும், அவரவர் தகுதிக்கேற்றபடி தேசப்பணிகளை வகுத்து யோகமாகச் செய்யவேண்டுமென்பதும் இவரது கொள்கை. இவர் சென்ற இடங்களிலெல்லாம் பஜனையும், தியானக் கூட்டமும், யோகப் பயிற்சியும், இயற்கை வைத்தியப் பயிற்சியும் நடத்தினர். இந்தியா அரசியல் விடுதலை பெறுவதுமட்டும் போதாது, இந்தியாவின் தனிப் பெருமை ஆத்ம சக்தி, ஆத்ம ஞானம், ஆத்ம சுதந்தரம். இவை சுத்த யோகத்தால் வரும். தேசப் பணியைக்கூட யோகமாகவே செய்ய வேண்டும். பாரத சமுதாயம் கீதைவடிவாக அமைய வேண்டும். அந்தண உள்ளமும், வீரப் புயமும், கலேத் திறனும், சேவா சாதனமும் கூடிய புதிய பூரண

வாழ்வை பாரத சமுதாயம் வாழவேண்டும் என்பது இவர் கொள்கை.

ஒவ்வோர் இந்திய ஆணும், பெண்ணும் சக்தி மின்சாரமாய் வீறு பெற்று வாழவேண்டும். ஒவ்வொருவரும் தாமே இந்தியா என்றுணரவேண்டும் இந்தியா வெறும் மண்ணன்று; இந்தியா ஒரு சக்தி, உலகிற்கு சுத்தான்மக் கதிர் பரப்பும் பாரத சக்தி. ஒவ்வொருவரும் அந்தச் சக்தி மயமாகவேண்டும் என்ற உயர்ந்த கருத்துடன் இவர் தேசத்தாயை இக் கீதங்களால் உபாசிக்கிறார்.

இக்கீதங்கள் பலவற்றை சுத்தானந்தர் பாடி ஆனந்தக் கூத்தாடும்போது, ஐயரும் அழகாக நடனமாடியதுண்டு. பாரதியார் தவக்குடிலில் பாரத சக்தி உருவச்சிலை முன் அமோகமான பூஜையும் பஜனை தீவப் பிரதக்ஷிணங்களும் அக்காலம் நடந்தன. அதே கீதங்களைப் பாடியே சுத்தானந்தர் தேச சேவை செய்தார். அக் கீதங்களில் பல எங்கெங்கோ சிதறி விட்டன. அன்பு நிலையத்தார் முயற்சியால் சுமார் 500 கீதங்கள் கிடைத்தன. அக் கீதங்களில் அந்தந்தக் கால நிகழ்ச்சிகளைக் காரசாரமாகப் பாடியிருந்தார் பாரதியார். அவற்றையும் இன்னும் பலவற்றையும் அவரே வெளியிடாமல் தடுத்துவிட்டார். மீதியுள்ளதில் எக்காலத்திற்கும் பயனுள்ளதாய், நூற்றுப் பதினைந்து கீதங்கள் அன்பு நிலையத்தால் எங்களுக்குக் கிடைத்தன, ஒவ்வொரு கீதமும் உயர்ந்த கருத்துக்களுடன், இந்தியாவின் உயிர்நாடியில் ஜீவசக்தி நாதம் செய்கிறது. இப் பாடல்களை அன்பர் அனுபவித்துப் பாடுக! ஆனந்தக் கூத்தாடுக! அதனால் ஒற்றுமையுண்டாகும், ஆத்ம சக்தி வளரும், காரிய சித்திக்கு வீர எழுச்சி யுண்டாகும். நாடும் வீடும் சாந்த சுப மங்கள சுந்தர வாழ்வு பொலியும்.

வாழ்க பாரத சக்தி!

எந்தாய் வாழ்க !!

*பாரத சக்தி நிலையத்தார்.*

24—11—46

# இந்தியத் தாய்.

இராகம்: பேஹாக் தாளம்: ரூபகம்

இந்தியத் தாயமுதை—எம்மை
ஈன்ற தவத்திருவை
வந்தே மாதரம்! எந்தாய் வாழ்கென
வாழ்த்தி வணங்கிடுவோம்! (இந்தி)

சுந்தரப் பொன் முகத்தாள்—புதுக்கலை
சொட்டும் பசுவளத்தாள்.
சந்திர சூரிய தாரகை போலொளிர்
சத்தி ஜோதி இவள் (இந்தி)

ஈகையிலே சிறந்தாள்—அருங்கலை
இன்பத்திலே வளர்ந்தாள்.
வாகை அணிந்த வரம்பெறு வீரரின்
வண்மையிலே மிகுத்தாள் (இந்தி)

உலகினும் பெரியாள்—எங்கள்
உயிரினும் அரியாள்.
பலமும் வெற்றியும் பாலித் தருள்செய்யும்
பாரத சக்தி யிவள் (இந்தி)

வெல்க சுதேசம் என்றே—எல்லாரும்
விரும்பித் தொண்டு செய்வோம்.
செல்லும் இடமெல்லாம் சேமமுற இதன்
கீர்த்தியை நாட்டிடுவோம்! (இந்தி)

# 2. கருணை இந்தியா

இராகம்: சங்கராபரணம்] [மிஸ்ர ஏகதாளம்

உலகளந்த கருணை யுள்ளம்
ஓங்கும் வித்தகி.
பல மதங்கள் ஒன்று சேரும்
பரிதி இந்தியா! (உல)

அள்ளி அள்ளி நல்ல செல்வம்
அளித்திடும் செல்வி.
வெள்ளம் போல வேத நூல்கள்
விளைக்கும் இந்தியா! (உல)

மண் வெறிக் கொலைகளற்ற
மாசிலா மணி
புண்ணியப் பொது நலம்
புரியும் இந்தியா! (உல)

கொந்தளித்துப் பொங்குகின்ற
கொடிய போர்களைத்
தந்தவெம் மனத்தை வென்ற
சாந்த இந்தியா! (உல)

புண்பட் டோர்க்குப் புகலளித்த
புனித இந்தியா!
விண்ணரசை மண்ணுலகில்
விளக்கும் இந்தியா—வாழ்க!
வீர இந்தியா! (உல)

# 3. எந்தாய் வாழ்க!

இராகம்: நவரோஜ்] [தாளம்: ஆதி

எந்தாய் வாழ்கெனும் மந்திர நாதமே
இன்பத்தை ஊட்டுதம்மா—எங்கள்
இந்தியப் பாசுரத் தென்றவந் திதயத்தின்
தந்தியை மீட்டுதம்மா! (எந்தாய்)

அன்னை இயற்கையின் புன்னகை அழகினில்
அமுதஞ் சுரக்குதம்மா—அவள்
வன்ன மலைநதி வனங்களில் ஆனந்த
ஞானம் பிறக்குதம்மா (எந்தாய்)

தென்மொழி வடமொழித் தேனமு துண்டதும்
சித்தம் குளிருதம்மா—மிக
உன்னதக் கவிகளின் சன்னத வாக்கிலெம்
உள்ளந் தவழுதம்மா (எந்தாய்)

மாதரின் கற்பொளி மாணிட வாழ்வினை
மங்கல மாக்குதம்மா........!
காதலர் உயிருயிர் கலந்தநல் இன்பமும்
கடவுளைக் காட்டுதம்மா! (எந்தாய்)

சாதிமத பேதச் சள்ளை யில்லாதொரு
சமரஸங் காணுதம்மா,
ஆதவன் வட்டத்தில் அமை கதிர்க் கணமென

# 4. ஞானபூமி

**இராகம்: பூர்வகல்யாணி]** **[தாளம்: ரூபகம்**

ஞான பூமி நீ—வீறு
நல்கும் சக்தி நீ
தேனும் பாலுந் தீங்கனியும்
செழித்த இந்தியா

இருளும் அச்சமும்—போக்கும்
இரவி வாழ்க நீ!
அருளும் அறிவும் அன்பு மீயும்
ஆனந்தமு நீ! (ஞான)

அருமை யாவு நீ—எங்கள்
ஆருயிரு நீ
பெருமை யான கலைவளங்கள்
பெருகும் செல்வி நீ! (ஞான)

புண்ணியங்களே—வளர்
போக பூமி நீ—உன்னை
எண்ண எண்ண எங்கள் உள்ளம்
இன்பம் ஊறுதே (ஞான)

# 5. எங்கள் இந்தியா

ராகம்: கேதாரகௌளம்] [தாளம்: ஆதி

எங்கள் இந்தியாவை—நினைத்தால்
இன்பம் பொங்குதம்மா
தங்கமான நாடே—அழகு
தவந்து பொங்கும் நாடே (எங்)

கார்மலை அருவி—ஓங்
காரம் பாடு நாடே
பார்திசைக ளெல்லாம்—செல்வப்
பசுமை கொஞ்சு நாடே (எங்)

சிங்கம் போன்ற வீரர்—தவ
சித்தர் போற்று நாடே
சங்க நாத முடனே—ஓம்
சக்தி வாழ்க வென்போம். (எங்)

கொல் லரக்கர் வீழ—கொடுங்
கோல்களின்றி வாழ
வெல்லும் ஆத்மசக்தி—கொண்ட
விமலர் வாழுநாடே (எங்)

## 6. ஜய கீதம்

ராகம்: காமி] [தாளம்: ஆதி

பரம சுகானந்த பகபதி ஜய ஓம்
பாரத சக்தி மஹேசா. .
ஜய ஓம் ஜய ஓம் ஜய ஓம்
ஜய ஜய ஜய ஜய ஓம்

ஆரிய த்ராவிடர் ஜாரதுஷ்ட்ரர் இஸ்
லாமியர் கிறிஸ்துவருடனே
அன்புடன் அனுதினம் உன்பணி
[செய்திடும்

ஐக்கிய சக்தியை அருளாய்;
ஓர்குலம் ஓரின மாக
உலக நன்மை முன்னேற
ஒன்றுபட் டோங்கிட வருளாய்
பரம சுகானந்த யுகபதி ஜயஓம்
பாரத சக்தி மஹேசா (ஜயஓம்)

சத்திய நவயுக சித்தி யளித்திடும்
சுத்த சுதந்தர ராணி
தணல்பெறும் வீரமுந் தீரமுந் தந்தருள்
திவ்விய ஜீவன ரமணி
சமரஸ மஞ்சுள வாணி;
ஜகஜ்ஜோதி கல்யாணி
வாழிய பாரத மாதா;
பரம சுகானந்த பூரண குரு ஓம்
பாரத சக்தி மஹேசா (ஜய ஓம்)

# 7. சிங்கநாதம்

**மாண்டு - திஸ்ர ஏகம்**

சிங்கநாத கர்ஜனையுடன் — ஜே. ஜே.
ஜெஹிந்தென்ன தீரர்முன் செல்வோம்
சங்கநாத பேரி கொட்டியே — ஹே ஹே
சத்தியச் சமரை வெல்லுவோம்!

கோடிக்கோடி வீரர் நாடிதே — தர்மக்
கொடிபறக்கும் கொற்ற நாடிதே
ஈடிலாத இன்ப நாடிதே — ஆம் ஆம்
ஈகைமிக்க தியாக நாடிதே ஜே ஜே (சிங்)

பிழைநிறைந்த சாதி வாதமும் — நாட்டை
பிரித்து வைக்கும் சமயவாதமும்
பழைய பீடை யென்றொதுக்கியே — புதுப்
பண்புகொண்ட நண்பராகுவோம்
ஜே ஜே (சிங்)

அன்னியர்நம் அன்னைநாட்டினை
அடிமையாக்க முடியுமோ இனி?
தன்னுறுதி கொண்டுநின்றனம் — பந்தத்
தளையறுத்துத் தலை நிமிர்ந்தனம்
ஜே. ஜே. (சிங்)

அருள்பழுத்த கவிகள் யாவரும் — சொல்லும்
ஆத்மநேய ராகவாழுவோம்
இருளொழிக்கும் இரவிபோலவே — நாம்
இசைபெருக இகலை வெல்லுவோம்
ஜே ஜே (சிங்)

கற்பு மிக்க காதலின்பமும் — அறக்
கருணைமிக்க கலையின்பமும்
தற்பரக் கடவுள் இன்பமும் — எல்லாரும்
சரி சமானராய் நுகருவோம் ஜே ஜே (சிங்)

பெற்றதாயைப் பெருமை செய்குவோம்-இனி
பேடிபோலத் தொடை நடுங்கிடோம்
ஒற்றுமையின் சக்தி யோங்கவே — நாம்
ஒவ்வொருவரும் உலக மாகுவோம்
ஜே ஜே (சிங்)

# 8. சங்கொலி

செஞ்சுருட்டி] [ஆதி

வந்தே மாதரமென்றே ஊதுசங்கே!
வாழ்க சுதேசமென்றே ஊதுசங்கே
பந்தம் தொலைந்ததென்றே ஊதுசங்கே
பரமன் அருள்பரவ ஊதுசங்கே!

வானக் குடைநிழலில் வாழுகின்ற
மக்களெல்லாம் ஒன்றெனவே ஊதுசங்கே
ஞானப் பொதுவெளியில் நடனமிடும்
நாதன் பெருமைசொல்லி ஊதுசங்கே!

வெள்ளி வெளுத்ததென்றே ஊதுசங்கே
விடுதலை வந்ததென்றே ஊதுசங்கே
புள்ளிசை யுடன்பரி பூரணனைப்
புகழ்ந்து மகிழ்ந்து வெற்றி ஊதுசங்கே

சித்த வுறுதிகொண்டு சேமமுறவே
தேசமுழுதும் ஆன்ம நேசமுறவே
சக்தி பிறந்ததென்றே ஊதுசங்கே
சண்டை ஒழிந்ததென்றே ஊதுசங்கே

கொடுமை ஒழிய உயிர்க்கொலை ஒழிய
கொள்ளை ஒழிய பகைச் சள்ளை ஒழிய
மடமை வறுமைத்துயர் மடிந்தொழிய
மருந்து சமரஸமென் றூதுசங்கே.

# 9. எங்கள் அன்னை

புன்னாக வராளி,] [ஆதி.

அறமெனஉரு வெடுத்தாள் — எங்கள்
அன்னை சுதந்தரியே
மறவலியரக்கர் கெட — மால்
மருகனின் வேல்பிடித்தாள்.

வாணியின் வீணையிலே — வேத
வாக்கினை இசைத்திடுவாள்
வேணுவில் உயிர்பொழிந்தே — இன்ப
வெறிதரும் பாட்டிசைப்பாள்.

விசயனின் அம்பினிலே — ராமன்
வில்லினிலே யிருந்தே
அசுரரைப் புடைத்தழிப்பாள் — சக்தி
அன்பரைக் காத்திடுவாள்.

சிந்தையிற் சிவம் உடையாள் — வீரச்
செய்கையில் விசையுடையாள்
அந்தண மனமுடையாள் — சக்தி
அனலென வீறுடையாள்.

இன்பமிவ் வுலகமென்றே — சொல்லும்
இனியநல் வாக்குடையாள்
அன்பு வழியினிலே — உலகை
ஆண்டிடும் அருளுடையாள்.

பலமொழிப் பாட்டுடையாள் — ஒரு
பண்புறு கலையுடையாள்
உலகினும் வயதுடையாள் — இளம்
ஒளிவளர் கன்னியிவள்.

எண்ணருங் கோடிமக்கள் — எண்ணும்
எண்ணத்தில் இவளிருப்பாள்
புண்ணியத் தெய்வமிவள் — பரி
பூரண யோகினியே.

எண்பது கோடிக்கையால் — தொழில்
இயற்றிடும் திறனுடையாள்
கண்மணிக் கொளியிவளே — தெய்வக்
காட்சியின் பொருளிவளே.

கலியினைச் சாடிடுவாள் — ஜய
காளிபவானி யன்னை
உலகினை அழகு செய்வாள் — புது
யுகந்தருந் திருமகளே!



## 10. எங்கள் அரசு

ஸெளராஷ்ட்ரியா] [ஆதி

இந்திய நாடெங்கள் அரசே — இசை
ஏறிடுங் கடலதன் முரசே
விந்தியம் கைலையெம் மலையே — அவை
வெற்றி மகுடத்தின் சிலையே!

சிந்து கங்கை காவேரி — வளஞ்
செழித்திடப் பாய்ந்திடும் ஆறே;
சுந்தர இயற்கைஎம் வனமே — அதிற்
சொக்கிடும் கவிகளின் மனமே.

கீதையுங் குறளும் எம்வேதம் — உள்ளக்
கிளர்ச்சிகளே சங்கநாதம்
தீதையும் சூதையும் ஒழித்தே — நன்மை
செய்தவமே எங்கள் போதம்

கம்பரும் வ்யாசரும் கவிகள் — அருட்
கண்ணனும் அப்பரும் குருமார்
திண்புறு திலகர் மஹாத்மா — வீர
சிவாஜியெம் சீர்பெறுந் துணைவர்.

அருளும் கருணையும் அறமே — சுத்
தாத்ம சக்தி படைத்திறமே
பொருளும் எமக்குப் பரம்பொருளே - எங்கள்
புகழும் பொதுநலஞ்செய் மகிழ்வே.

காலத்தை வென்றதெம் கலையே — வான்
காட்சியை வென்றதெம் நிலையே
ஞாலத்தை வென்றதெம் எழிலே - எங்கள்
நாடெல்லாம் பேரின்பப் பொழிலே.

# 11. தலை நிமிர்க

குர்தலவாரானி] [தில்ர ஏகம்.

தலைநிமிர்க, மலையை போலத்
தலை நிமிர்க இந்தியர்!
கலைதுலங்க கவிதுலங்க
கரும வீரம் கனலவே! (தலை)

மடமை அச்சம் அடிமை நோய்கள்
மடிய வீர வுரிமையின்
கொடி யுயர்த்திப் படை நடத்திக்
கொடுமையைக் குமைக்கவே. (தலை)

மூதிய மூடப் புல் லுருவியை
முளை யிலாது களையவே
புதிய காலக் கற்ப கத்தை
பொதுவில் வைத்துப் போற்றவே. (தலை)

கேடு நீங்கக் கீழ்மை நீங்க
கீர்த்தி யோங்க நாட்டிலே
வீடு நம்ம தாக வீர
விடு தலையை நாட்டுவோம். (தலை)

கிலி பிடித்த அலிகள் போலக்
கெஞ்சுங் காலம் போனதே;
புலியைப் போல உரிமை காக்கப்
போர் புரியு நாளிதே. (தலை)

உண்மை ஒன்று தெய்வம் ஒன்று
உலக மாந்தர் ஒன்றெனத்
திண்மை யாக ஒன்றுகூடித்
தீரர் கூட்டம் வருகவே. (தலை)

# 12. போலி மனிதர்

மோகனம்] [ஆதி

வேலை செய்து பிழையார் — சும்மா
விண்ணைப் பார்த்து நிற்பார்
போலி மனிதர் காலம் — ஒழிந்து
போனதென்று சொல்வோம்
வெந்த சோற்றை யுண்டு — சும்மா
வீண ரட்டை யடித்தே,
சந்தைக் கூச்சலிடு வார் — அந்தச்
சார மற்ற மனிதர்.
செய்தித் தாளைப் படித்தே — பொய்
திரித்துக் கொண் டிருப்பார்;
தெய்வ நிந்தை செய்வார் — சொந்தத்
தேச நன்மை காணார்.
காந்தி காந்தி யென்பார்—அவர்
கதரு டுத்த மாட்டார்.
சாந்தி சாந்தி யென்பார் — கட்சிச்
சண்டை மூட்டி விடுவார்.
மக்கள் பஞ்சத் தாலே — தெருவில்
மடிந்து போகக் கண்டும்,
சொக்கத் தங்கப் பைக்குத் — தீப
தூபம் போட்டுத் தொழுவார்.
நாய்கள் பார்த்தும் உண்பார் — மனித
நண்பர் காண உண்ணார் — ஒரு
தாய் வயிற்றுச் சேயை — சீசீ
தள்ளிப் போடா என்பார்!

பேய் பிசாசு பில்லி — என்றே
பேடி யச்சங் கொள்வார்
வாய்ப் பந்தலின் கீழே — உயர்
வைகுண் டத்தைக் காண்பார்.
சகுனம் பார்த்து நிற்பார் — பல
சாதி பார்த்து நிற்பார்
மிகு முயற்சி யாலே — உலகை
வெற்றி காண மாட்டார்.
புதிய யந்தி ரங்கள் — செய்யும்
புலமை வேண்டு மென்றால்,
மூதிய சங்க ஏட்டைத் திருப்பி
மூன்று செய்யுள் படிப்பார்.
சாத்தி ரங்கள் பேசி — வீண்
சாதிப் பேயை வளர்ப்பார்
கோத்தி ரங்கள் பேசி — ஒரு
கோடிப் பிரிவு செய்வார்.
உள்ளு ணர்வு மின்றி — உண்மை
ஒழுக்கங் காத்த லின்றி,
எள்ளுந் தண்ணீர் விட்டே — எங்கள்
இந்து சமய மென்பார்.
துன்ப மூடர் காலம் — இனித்
தொலைந்த தென்று முழுகி,
அன்பு கொண்டு வாழ்வோம் — எல்லாரும்
ஆன்ம நேய ரன்றோ?



# 13. சுதந்தர ஒளிதருவீர்

பூபாளி] [மிஸ்ர ஏகம்.

மானிடர் படுந்துயரை—இங்கே
மாற்றிட வகையிலையோ?
வானகமே யிரங்காய்—எங்கள்
வறுமையைத் தீர்த்திடவே.

சந்திர சூரியரே—ஒளிர்
தாரகையின் கணங்காள்,
சுந்தர உலகினிலே—நல்ல
சுதந்தர ஒளி தருவீர்

வாடி வதங்குகின்றூர்—செக்கு
மாடெனப் பாடுபட்டும்,
ஆடிடுந் தென்றலம்மா—இவர்
ஆயாசந் தீராயோ?

கொட்டு முழக்குடனே—துள்ளிக்
குதித்திடுந் திரைகடலே—எங்கள்
கட்டுகள் விடுபடவே—வீரக்
கடும்புய லெழுப்பிடுவாய்.

காட்டுப் பறவைகளா—உங்கள்
கவலையில்லா வாழ்வை
நாட்டுக் குதவிடுவீர்—புது
நாகரிகந் தருவீர்.

# 14. எழுந்தருள்

புன்னாகவராளி] [ஆதி

எழுந்தருள் ஜயசக்தி—எங்கள்
இந்திய நாட்டினிலே.
அழுந்துயர் ஒழிந்திடவே—மக்கள்
ஆனந்த வாழ்வுறவே

கல்விக் கலைமகளே—வீரக்
கனலருள் காளியம்மே
செல்வத் திருமகளே—ஞானச்
சிரம்வளர் சிவனொளியே! (எழுந்)

சுயநலச் சிறுமையற—எம்மைத்
துண்டுசெய் துயர்களற
பயமறக் கீழ்மையற—மனப்
பகைக்குலம் அழிந்தொழிய (எழுந்)

தூக்கமும் ஏக்கமுடன்—உடற்
சோம்பலும் ஒழிந்திடவே
ஊக்கமும் ஒளி யறிவும்—உயர்
உள்ளத்தில் ஊறிடவே (எழுந்)

ஏக குடும்பமென—நாங்கள்
இணைந்து முன்னேறிடவே
யோக பலந்தருவாய்—இந்த
உலகு நலம்பெறவே, (எழுந்)

## 15. தேசம்வாழ அருள்

செஞ்சுருட்டி] [ஜம்பை

ஓம்பராசக்தி சண்டி பவானி
உள்ளத் தோங்கி ஒளிருங் கனலே!
தீமை தீர்ந்திட நன்மை பெருக,
தேசம் வாழத் திருவருள் செய்வாய்!

சோக மோகச் சுழலினிற் சிக்கிச்
சுருதிகெட்ட துயர்பெறும் வாழ்வில்,
வேக மாகவுன் வீணையை மீட்டி,
வேத நாதம் விளைந்திடச் செய்வாய்!

தொல்லை மிக்கவித் தொல்புவி வாழ்வில்,
துலங்க சுத்த சுதந்தரா னந்தம்,
எல்லையற்ற நின் சிற்சுக சக்தி
ஏறும் வீரச் சுடரொளி யீவாய்!

துட்டராக்ஷஸக் கும்பலைப் பற்றித்
தூருடன் அழிப்பாய் ஜய துர்க்கை!
அட்டமங்கலச் செல்வ மளிப்பாய்
அனந்த லக்ஷ்மி அழகின் உயிரே!

உலகம் போற்றி உயர்நிலை சேர,
ஓது கல்வி தொழில்வள மோங்க,
கலைகளாயிரந் தந்தெமைக் காப்பாய்,
கமல வாணி கருணைக் கடலே!

# 16. புதுயுக மனிதன்

குர்தலவராளி] [ஏகம்

திரிகி விட்ட மீசையும்,
திண்மலைப்புயங்களும்,
பரிதி போன்ற விழிகளும்,
பார்த்தன் போன்ற பார்வையும்,

உறுதியான கைகளும்,
ஊக்கமான கால்களும்,
பொறுமையான செஞ்சொலும்,
பொருமையற்ற நெஞ்சமும்,

வீரர் போற்றும் வீறுடன்
விரோதி யஞ்சும் தீரமும்,
சீர்சிறந்த செல்வமும்
சிறந்த செய்ய கல்வியும்,

மதிமிகுந்த செய்கையும்
மறுவிலாத வாய்மையும்,
விதியை வெல்லும் ஆற்றலும்,
விளங்குந் தெய்வ மானிடன்.

பொதுநலப் புலவனை
பூர்ணசக்தி மான் அவன்
புதுயுகப் புனிதனைப்
புகழ்ந்து போற்றி வாழ்த்துவோம்.

# 17. எங்கள் உடல் இந்தியா

ரதிபதிப்ரியா] [ஆதி

இந்திய நாடெங்கள் உடலே—வெள்ளி
இமயமலை எங்கள் முடியே
விந்தியமலை எங்கள் இடையே—கீழ்
மேல்தொடர் எந்திருக் கரங்கள்.

கங்கையும் சிந்துவும் சடைகள்—தென்
கன்னிமுனை எங்கள் அடிகள்,
பொங்கிடும் காவிரி விமலை—எங்கள்
பொன்னொளிர் பூமணி யாராம்.

உண்பதும் இந்திய உணவே—நாம்
உடுப்பதும் இந்திய உடையே;
எண்ணுவ திந்திய நலமே—நாம்
இயற்றுவ தன்னையின் பணியே.

அந்தண உள்ளமும் அறிவும்—வீரர்
ஆண்மையும், ஆயிரம் தொழிலும்,
சிந்தையி லன்புடன் கொண்டோம்—இந்து
தேசமே எங்கள் சுவாசம்

ஒவ்வொரு மனிதனு நாமே—நாம்
ஒவ்வொரு மனிதனு மாவோம்.
இவ்வுல காலய மாமே—அதில்
இன்னுயிர்த் தொகுப் பிறையாமே.

# 18. உரிமைப் பாட்டு

**சங்கராபரணம்**] [ஜம்பை **தாளம்**

உரிமையுண்டு உரிமையுண்டு
உலகில் வாழும் யாவர்க்கும்
பிரிவிலாது துயரிலாது
பெருமையாக வாழவே. (உரி)

பூமியின் வளமை யெல்லாம்
பொதுவுடமை யாகவே,
சாமிக்கும் அடிமை யின்றிச்
சரி நிகராய் வாழவே (உரி)

மனிதனுக்கு மனிதன் எந்த
வகையிலும் இழிவின்றிப்
புனிதமான தொண்டு செய்து
புலமை கொண்டு வாழவே (உரி)

பஞ்சமின்றி, நோய்களின்றிப்
பாபமின்றித் தீயரின்
வஞ்சமின்றி லஞ்சமின்றி
வறுமை யின்றி வாழவே (உரி)

கட்டுமின்றிக் கவலை யின்றிக்
காவலின்றி யாவரும்
சட்டமின்றித் தூய நெஞ்சச்
சாட்சி பற்றி வாழவே (உரி)

காணும் சக்தி—சிவனைப் போலக்
காதல் வாழ்வில் ஒன்றியே
ஆணும் பெண்ணும் தேசமெங்கும்
அங்கை கோத் துலாவவே (உரி)

# 19. எங்கள் பொது நெறி

காபி] [ஆதி

இன்பம் விளைப்பதே எங்கள் மதம்—ஆம்
எம்மதமும் எங்கள் சம்மதமே.
அன்பு விளைப்பது சைவமதம்—ஈசன்
அருட்பணி செய்வது வைணவமாம்.

சீலத்தைக் காப்பது புத்தமதம்—கொலை
செய்வதை மறுப்பது ஜைனமதம்
ஞாலத்தை நானெனக் காண்பதுவே—ஆத்ம
ஞானத்தைப் போதிக்கும் வேதமதம்
(இன்)

பரம்பொருள் ஒன்றென வணங்குவதே-நல்ல
பக்தி மிகுந்த இஸ்லாமியமாம்;
வரம்பறு பொறுமையுந் தியாகமுமே—தரும்
வானரசென்பது கிறிஸ்துவமாம் (இன்)

தூயொளி போற்றுதல் பார்சிமதம்—வீர
சுதந்தரம் போற்றுதல் சீக்கியமாம்
தாயெனப் பெண்ணை மதிப்பதுவே—சக்தி
தந்திடுந் தாந்திர மார்க்கமென்போம் (இன்)

ஒருமையைக் காண்பது யோகமென்போம்—[அந்த
யோகத்தில் வாழ்வது போகமென்போம்,
மறுமையை இம்மையில் கண்டிடுவோம்-இங்கே
மானிடர் வானமு துண்டிடுவோம் (இன்)

# 20. ஆக்கமும், நீக்கமும்

கமாஸ்] [ரூபகம்

புதிய நன்மை ஆக்குவோம்
பழைய தீமை நீக்குவோம்
முதிய நன்மை போற்றுவோம்
முழு மனித ராகுவோம்! (புதிய)

அருண ஜோதி போலவே
அழகினிற் பொலிகுவோம்
கருணையாறு போலவே யிக்
காசினி வளஞ் செய்வோம். (புதிய)

தொத்து நோயினும் கொடிய
துர்ப்பலத்தைத் தூ வென்போம்.
சத்தியை மிக வளர்த்துச்
சாடுவோம் எமனையும் (புதிய)

பொய்யுங் கோளும் வஞ்சமும்
பொறாமையும் ஒழியவே,
மெய்யும் அன்பும் ஈகையும்
விரத மாக மேவுவோம். (புதிய)

துயர்களை உர மிட்டுச்
சுதந்தரப் பயிர் செய்வோம்
அயர் விலா முயற்சியால்
அமர வாழ்வை எய்துவோம். (புதிய

# 21. சுதந்தரம்

இராகம் பியாக்] [ஆதி தாளம்

சுதந்தரம், சுதந்தரம், சுதந்தரம் வேண்டும்
தூயவர்க் கருள்செய்யும் தொல்பெருந் தாயே!
பதமிழந் தழிக்கு நிர்ப் பந்தத்தை நீக்கி
பாரத மக்களைக் காப்பதுன் பாரம். (சுதந்)

பால்வளந் தேன்வளம் பாலிக்கு நாட்டில்
பஞ்சம்வந் தெம்முயிர் பறிப்பதும் ஆமோ?
வேல்வளம் பெருகிய வீரரின் நாட்டில்
வெறுமையும் அச்சமும் சிறுமையும் ஆமோ
(சுதந்)

கண்குளிர் வனப்புள கற்பக நாட்டில்,
கண்ணீர்விட் டேழைகள் கதறிடப்போமோ?
புண்களைத் தீர்க்க ஓர் புகலெமக் கிலையே?
புத்தரின் சந்ததி புழுக்களின்விலையோ? (சுதந்)

தீரர்கள் விளங்கிய திருமிகு நாட்டில்,
சிவஜியும் அப்பரும் சிறந்தநன் னாட்டில்,
சாரமில் சக்கைபோல் தாழ்வது மாமோ?
சரிநிகர் மனிதராய்த் தலைநிமிரோமோ?(சுதந்)

கல்வியும் செல்வமும் மல்கிய நாட்டில்,
கண்மூடித் தனங்களின் களிநட மாமோ?
வெல்லும் வினைத்திறனும் சொல்லினில்
[உரமும்
விதியையுங் கடந்திடும் மதியையுந் தருவாய்!
(சுதந்)

# 22 சுதந்தரச் சுடரே

ரதிபதிப்ரியா] [ஆதி

சுதந்தரச் சுடரே, சூழ்கநின் கதிரே!
நிரந்தர முலகு நிறைமகிழ் வுறவே;
இந்திய நாட்டை வந்தவ ரெல்லாம்
சொந்தங் கொண்டாடத் தந்திடு வோமோ?
(சுதந்)

கொள்ளை யடிப்போர் கொடுமை யிழைப்போர்
எள்ளி யிகழ்வோர் எமையாள் வாரோ!
ஒற்றுமை யாக வெற்றிகள் கூறி,
பெற்றிட உரிமை தெற்றென வெழுந்தோம்
(சுதந்)

அறத்தினைக் காக்கும் அருட்பெரும் வீரர்
இரத்தமும் ஊற்றி இன்னுயி ரீவோம்
நொந்தது போதும் வெந்தது போதும்;
பந்தனை தீர முந்துவம் வாரீர் (சுதந்)

தூயசுதேச நேசரின் சங்கம்
தாயகத்திற்கு நாயக மாமே.
இதுநலமென்றே விதிநியமித்தே
பொதுஜனசக்தி நிதமர சாளும் (சுதந்)

வரவினைப் பெறவும் செலவினைத் தரவும்
அரியநம் வீட்டில் உரியவர் யாமே.
அடிமையுமில்லை மிடியிருளில்லை
தடையினியில்லை விடுதலை யுடையோம். (சுதந்)

# 23. எங்கள் அன்னை

இராகம் செஞ்சுருட்டி] திஸ்ர ஏகதாளம்

காலையிளம் பரிதியைப்போல்
கனிந்த நகை முகமும்,
கட்டழகு சொட்டுகின்ற
கலைவடிவுங் கொண்டே,
சோலைவளங் குலுங்குகின்ற
சோதிமலை மீதே
துலங்குகின்றாள் எங்களன்னை
நலங்களெல்லாங் குலுங்க!

கள்ளுமிழும் பூமணத்தை
அள்ளிவருந் தென்றல்,
கனியருந்திக் கவிபாடும்
கட்டறியாப் புட்கள்,
தெள்ளியஓங் காரமிசை
தேனருவி போலே
தெய்வமறை முழங்குகின்றாள்
உய்வருளும் அன்னை!

கண்ணன்குழல் கேட்டுருகக்
கந்தன்மயில் ஆடக்
காவிரியாழ் மீட்டுகின்றாள்
கமலமலர்க் கையால்;

தண்கடல்பல் லாண்டிசைத்தே
தாவிமுர சடிக்கத்
தமிழரசி விளங்குகின்றாள்
அமுதமொழி வாயாள்!

வரங்களெல்லாம் வழங்குகின்றாள்
கரங்களெல்லாம் குவிப்போம்;
வாழிஎந்தாய் வாழி யென்றே;
வனமலர்கள் சொரிவோம்!
சிரங்களெல்லாம் ஒற்றுமையாய்ச்
சேர்ந்து பணிந் திடுவோம்;
திசைகளெல்லாம் எதிரொலிக்கச்
செயசெயவென் றார்ப்போம்!



# 24. ஜயக்கொடி

இராகம் காபி] [ரூபக தாளம்

கொடி உயர்த்திடுவோம்—ஜயக்
கொடி யுயர்த்திடுவோம்.
கடமை காத்திடுவோம்—தியாகக்
கனல் குளித்திடுவோம். (கொடி)

ஒற்றுமையாய்ப் பணிவோம்—தாயின்
ஓங்கும் ஜயக் கொடியை
வெற்றிகள் கூறிடுவோம்—சுற்றி
வீர நடம்புரிவோம். (கொடி)

சூரிய சந்திரர்க்கும்—நமதிசை
சொல்லிப் பறக்குது பார்—இதைப்
பார்முழுதும் வணங்க—நாம்
பார்த்து மகிழோமோ? (கொடி)

எங்கள் மனவுறுதி—என்னும்
இமய மாமுடியில்,
தங்கும் ஜயக்கொடியை—வீர
சக்திப் படலமென்போம். (கொடி)

போர்ப் புயல் வரினும்—பூகம்பப்
புரட்சிகள் வரினும்,
கார்ப்புயல் வரினும்—நிலை
கலங்கி நிற்பதுண்டோ? (கொடி)

பார்நிலம் உள்ள மட்டும்—ஜய
பாரதம் உள்ள மட்டும்
ஆருயிர் உள்ளமட்டும்—இதன்
அறத்தைக் காத்திடுவோம். (கொடி)

இந்த வுடலினிலே—ஒருதுளி
இரத்தம் உள்ள மட்டும்
எந்தாய் வாழ்கவென்றே—இதை
ஏந்திப் பிடித்திடுவோம். (கொடி)

வங்கக் கலைவாணர்—தமிழகம்
வாழும் அருளாளர்
சிங்க மராட்டியர்கள்—சிந்தியர்
சீக்கியர் பாரசிகர் (கொடி)

செல்வக் குசராத்தர்—கோசலர்
சிங்களர் பர்மியர்கள்
மல்லில் இணையில்லா—ரஜபுத்ரர்
மாளவர் நேபாளர், (கொடி)

ஊக்கமிகுந் தெலுங்கர்—உழைப்பில்
ஓங்கும் மலையாளர்
ஆக்கமிகுங் கன்னடர்—துளுவர்
ஆரிய திராவிடர்கள், (கொடி)

இந்து முகம்மதியர்—கிறிஸ்துவர்
என்கிற பேதமில்லை;
இந்தப் பொதுக் கொடிக்கீழ்—எல்லாரும்
இனிது வாழ்ந்திடுவோம். (கொடி)

எந்த வகுப்பினரும்—உலகில்
எங்கே பிறந்தவரும்,
வந்ததின் சேவை செய்வார்—ஒருகுல
மக்களென மதிப்போம். (கொடி)

எங்கெங்கு புத்தமதம்—பரவி
ஏற்றம் பெருகிடுமோ,
அங்கெல்லாம் எங்களன்னை—அறக்கொடி
ஆட்சி புரிவதென்போம். (கொடி)

கண்ணபிரான் கீதை—வள்ளுவர்
கண்ட தமிழ் வேதம்—வழங்கும்
புண்ணியர் வீடுதோறும்—இந்தக் கொடி
பொலியும் என்றறிவோம், (கொடி)

கடமை காத்திடுவோம்—மாதர்
கற்பினைக் காத்திடுவோம்
மடமையை ஒழிப்போம்—அறிவொளி
மல்கப் பணி புரிவோம். (கொடி)

நாட்டை யோர் நாடழிக்கும்—அதர்மத்மை
நாங்களினிப் பொறுக்கோம்
வீட்டை யழிக்கவரும்—கொடியாரை
வீமனெனப் புடைப்போம். (கொடி)

நல்லதை யாதரிப்போம்—தீமை
நலியப் போர் புரிவோம்
எல்லாரும் இன்புறவே—மணிக்கொடி
ஏற்றிப் பணிந்திடுவோம். (கொடி)

பாரதநாடு தர்மபூமி. அதன் கொடி ஞானக் கொடி. அது சூரிய சுதர்சனத்தை நடுவே கொண்டது. எங்கெங்கே பாரத தருமம் பரவியுள்ளதோ, அங்கெல்லாம் நமது கொடி பறக்கிறது. பாரதநாடு மலைக்கும் முனைக்கும் உட்பட்டதன்று. அஃது அகண்டமானது. அது தர்ம சக்தியால் எல்லையற்றுப் பரவியுள்ளது. அந்த அகண்ட பாரதத்தில் உலகெல்லாம் கூடி ஒரு குலமாக வாழலாம். எல்லாரும் அத்மதீரராக வாழலாம். எத்ர விஸ்வம் பவதி ஏகநீடம்—உலகெல்லாம் ஒரு கூட்டுப் பறவைபோல் ஒன்றிவாழும் இடம் என்றனர் முனிவர். அதுவே இப்பாட்டின் கருத்தாம்.



# 25. ஒட்டுறவாக

ஹரிகாம்போதி] [ஆதி

ஒட்டுற வாக
உலகினில் வாழ்வோம்
கட்டுக ளின்றிக்
கவலையு மின்றி (ஒட்

பிரிவினை யின்றிப்
பேதமை யின்றி
அறிவினை வளர்த்தே
அன்புகொண் டுளத்தில் (ஒட்)

கனதனச் செருக்கும்
கடுமையு மின்றி
மனிதனை மனிதன்
சமமென மதித்தே (ஒட்)

சுயநல வஞ்சச்
சுரண்டுத லின்றி
கயவரின் கோள்பொய்க்
கலகங்க ளின்றி (ஒட்)

பணத்தினைப் பறிக்கும்
பகட்டுக ளின்றி,
குணத்தினைத் துலக்கும்
கூட்டுற வுடனே (ஒட்)

கல்வியுந் தொழிலும்
காதலும் கற்பும்
இல்லற வாழ்வில்
இலகிட நன்றே (ஓட்)

கலைநல முடனே
கவியணி யுடனே
நிலையறந் துலங்க
நேயர்க ளெல்லாம் (ஓட்)

தேசத்தை உடலாய்த்
தெய்வத்தை உயிராய்
நேசித்துள் ளன்பால்
பூசித்துப் பணியால் (ஓட்)



# 26. நாமாவளி

[தேசியக் கொடி யேற்றியதும், தேசப் பெரியார் பெயர்களுக்கு வெற்றி கூறுதல்.]

காபி] [திஸ்ர ஏகம்

வெல்க சுதேசம்என்றே
வீரக் கொடிபிடித்த
நல்ல மஹான்களுக்கு ஜே ஜே ஜே!

கயிலைப் பரமனுக்கு
கண்ணன், இராமனுக்கு
மயில்வேல் முருகனுக்கு ஜே ஜே ஜே!

வீர ஹனுமனுக்கு
வீமன், விஜயனுக்கு
சேரசோழ பாண்டியர்க்கு ஜே ஜே ஜே!

புத்தர் அசோகர், சந்த்ர
குப்தர் கனிஷ்கருக்கு
உத்தம ஹர்ஷனுக்கு ஜே ஜே ஜே!

ராணப் ரதாபனுக்கு
ராஜா சிவாஜிக்கு
நானராவ், லக்ஷ்மிபாய்க்கு ஜே ஜே ஜே!

குருராம தாஸருக்கு
கோவிந்த சிங்கருக்கு
கருணைமிகு நானகர்க்கு ஜே ஜே ஜே!

காந்தி மஹாத்மனுக்கு
கஸ்தூரி மாதாவுக்கு
வேந்தன் சுபாஷுக்கு ஜே ஜே ஜே!

நிகரில் திலகருக்கு
நேரு, சரோஜனிக்கு
ஜகதீசன், *ராமனுக்கு ஜே ஜே ஜே!

வள்ளுவர், கம்பருக்கு
மாணிக்க வாசகர்க்கு
உள்ளன்பு வள்ளலுக்கு ஜே ஜே ஜே!

வங்க ரவீந்த்ரருக்கு
வரமிகு பாரதிக்கு
சிங்கம்போன்ற †ஐயருக்கு ஜே ஜே ஜே!

தீனிஸ்லாம் அக்பருக்கு
சிலுவை அடியாருக்கு
ஞான முனிவருக்கு ஜே ஜே ஜே!

ஸ்ரீராம க்ருஷ்ணருக்கு
தீர தயானந்தருக்கு
ராஜாராம மோகனர்க்கு ஜே ஜே ஜே!

‡வேதாந்த கேசரிக்கு
✠விஞ்ஞான சித்தருக்கு
நாதாந்த யோகியர்க்கு ஜே ஜே ஜே!

முதுமைப் புலவருக்குப்
புதுமைப் புலவருக்குப்
பொதுநல வீரருக்கு ஜே ஜே ஜே!

* ஸி. வி. ராமன்
† வ. வே. சு. ஐயர்
‡ விவேகானந்தர்
✠ ஸ்ரீ அரவிந்தர்



# 27. எங்கள் கோயில்

இராகமாலிகை] [சாபு-தாளம்.

பூபாளம்

பொன்னி லங்கிடும் புண்ணியக் கோயில்
போற்றி பாரத மாமணிக் கோயில்
மன்னுலகு வணங்கிநின் றேத்தும்
மாசிலாத தவம்வளர் கோயில் (பொ)

பிலகரி

விண்ணைக் கொஞ்சிடும் வெள்ளிச் சிகரம்
வெற்றிகூற விளங்கிடுங் கோயில்
கண்ணைக் கொஞ்சும் கவின்பெருங் கோயில்
கங்கைகாவிரி பொங்கிடுங் கோயில் (பொ)

சாவேரி

கலைகள் ஆயிரம் கட்டிய கோயில்
கவிகள் ஆயிரம் பாடிய கோயில்
அலைகடல்மூ ர சார்த்திடுங் கோயில்
அன்புத் தெய்வம் அமர்திருக் கோயில் ()

சுரட்டி

சொல்லும் செய்கையும் ஒன்றிய தூயர்
தொண்டு செய்யும் சுதந்திரக் கோயில்
வெல்லும் வீறு வழங்கிடும் கோயில்
வித்தகர் சொலும் சத்தியக் கோயில் (பொ)

# 28. எங்கள் சுதேசம்

பேஹாக்] [ஆதி.

பாரத தேசம் எங்கள் சுதேசம்
பாரினுக் கேயது ஞானப்ர காசம் (பார)

மனத்தினுக் குகந்த வனப்புறு தேசம்
நினைத்திட நினைத்திட நினைப்புயர் தேசம் (பார)

அருங்கலை யமுத விருந்தயர் தேசம்
பெருந்தவ முனிவர் இருந்தருள் தேசம் (பார)

புண்ணியப் புகழைக் கண்ணெனக் காக்கும்
திண்ணிய தீரரின் பண்ணையி தாமே! (பார)

யோகத்திலே, சிவ போகத்திலே, நல்ல
தியாகத்திலே முத லாகிய தேசம்! (பார)



# 29. தேச பராசக்தி

காபி] [தேசாதி தாளம்.

பல்லவி

பாரத தேவி திருவழகை—நிதம்
பார்க்கப் பார்க்கப்பர மானந்தமாம்-ஜய (பா)

அநுபல்லவி

ஆரிய திராவிட யவனக்கிறிஸ்துவ
பார்ஸியூத சமுதாயம்
அன்னையென் றேத்திடும் அருட்சுடராகிய
ஆதி பராசக்தி, வேதவாணி—ஜய (பா)

சரணம்

அன்னமும் மான்மயில் குயிலும்,
அம்புடம் வாளுடன் அயிலும்,
மின்னலும் இந்துவும் புனலும்
மென்மல ரணிகளுங் கயலும்—எனக்

கவிகளின் கற்பனை உவமைகள் காணக்
கவின்பெறும் அற்புத நவம்பெறு நாயகி! (பா)

கலைவளர் யாழிசை முரலும் — ஓம்
காளி சக்தியெனக் குரலும்,
அலைகடல் முரசதிர் இசையும் — அவள்
அன்பொலி முழங்குமெத் திசையும்,

தீத்தணல் போன்றொளிர் ஆத்தும சக்தியும்
செவ்வியும் திவ்விய தேஜஸும் விளங்கிடும் ()

# 30. அலங்காரம்

தோடி] [ஆதி.

பல்லவி

அலங்காரம் செய்திடுவோம்
அகண்டபாரதி சக்தி அன்னை மனங்குளிர (அ)

அநுபல்லவி

கலங்காத உள்ளமாம் கனகபீடத்தில் வைத்தே
கலைகளாயிரங் கொண்ட
கனங்குழை யணிகளால் (அ)

சரணம்

கவிமணி வீணையும், கனலுங் திரிசூலமும்
கலக்கங் தவிர்த்திடும்
கருணை மலர்க்கரத்தில்

புவிமுழுதும் புரக்கும் புதுயுகச் செங்கோலுடன்
புகழ்மாலையும் தந்தே
புலவர் மனமுகந்தே



# 31. பாரத ஜோதி

பிலகரி] [ஆதி

**பல்லவி**

பாரதஜோதியைக் கண்டோமே — பர
மானந்தங் கொண்டோமே — ஜயஜய (பா)

**அநுபல்லவி**

தீரர்கள் தூண்டிய தியாகக்கனலிலே
தேஜோன்மயமான தெய்வசொரூபியாக ( )

**சரணம்**

உண்மையைக் காத்திட உயர்த்திய கொடியும்,
உன்னத ஞானமே மின்னிடு முடியும்,
பெண்மையும் ஆண்மையும் பேரின்பமெய்திடப்
பிரியாத பொதுநல உரிமைப் பேணிடும் (பா)

அன்னியச் சூதின்றித் தன்னல வாதின்றி,
அடிமை மடமையின்றி
அன்புக் குழந்தைகளை

உன்னத நிலைபெறத் தன்மய மாக்கியே
உலகெலாம் வணங்கிட
ஓம்சக்தி ஓமென (பா)

## 32. உன்புகழ் எங்கே?

காமாஸ்] [ரூபகம்.

எங்கு சென்ற துன்புகழ்
இணையி லாத தேசமே?
மங்கலம் இழந்ததேன்?
மலர்முகம் குவிந்ததேன்? (எங்)

யாழிசை தளர்ந்ததேன்?
இடர்களே வளர்ந்ததேன்?
ஊழினையும் வென்றிடும்
உரங்கொள் வீரர் இல்லையோ? (எங்)

கலையின் மிக்க புலவரின்
கவிதை கொண்ட செல்வியே!
உலகிலுன் அருட்சுடர்
உருக்குலைந்து போனதோ? (எங்)

இளம்பெருஞ் செழியனும்
இராசராச சோழனும்
துளங்கறப் பிடித்த வாள்
துருப்பிடிக்க லானதோ? (எங்)

பாரிலுன் சுதந்தரப்
பதவியை உதவிடத்
தீரனை மற்றொரு
சிவாஜிமன்ன னில்லையோ? (எங்)

# 33. ஏன்! ஏன்!

உசேன்] [ரூபகம்.

சூரிய நாராயணன்—இன்று
சுடச்சுடப் பொங்க லுண்பான்!
ஆரிய நாட்டினிலே—அவன்
அமுதம் பொழிந்திடுவான்.

சீரகச் சம்பாவும்—நல்ல
செங்கரும் புந்தருவான்—எனில்
பாரத தேசத்திலே—இந்தப்
பஞ்சப் படுகொலை யேன்?

பட்டையுந் தோற்கடிக்கும்—நல்ல
பஞ்சுப் பொதிக ளுண்டு;
கட்டத் துணியின்றி—எந்தாய்
கந்தை யுடுத்துவதேன்?

சுழல் இராட்டையுண்டு—நெய்யச்
சுறுசுறுப்பு முண்டு
விழலுக் கிறைப்பதுபோல்—பரதேச
வேட்டியை வாங்குவதேன்?

எப்புறம் பார்த்தாலும்—இயற்கை
இன்பநகை புரிய,
கப்பரை கொட்டி யிங்கே—பிச்சைக்
காரர் அலறுவதேன்?

வேதமும் ஆகமமும்—முழங்கும்
வித்தை செழித்த நிலம்—இங்கே
சாதிக் குழப்பங்களாற்—பழி
சண்டை பெருகுவதேன்?

அருள்வளங் குலுங்கும்—இந்த
அறிவுச் சோலையிலே,
இருளடர்ந் திடலேன்—எங்கள்
இரவியே புகலாய்!

# 34. அவள் விசனம்

செஞ்சுருட்டி] [ஜம்பை

முல்லைமணத் தென்றலென்னை
முத்தமிடும் வேளை;
அல்லிவிழி மலர வரும்
அம்புலிமான் கண்டே
எல்லையில்லாக் கடல்பொங்கும்
இன்பமான வேளை;
சொல்லறியாச் சுகக்கனவிற்
சொக்கிமகிழ்ந் திருந்தேன்.

அந்திதரும் அமைதியிலே
அழுகையொன்றைக் கேட்டேன்:
கந்தைகட்டிக் கையேந்திக்
கடும்பசியென் றிரந்தே,
வந்தனளோர் வடிவழகி
வறுமையினல் வாடி;
இந்தவிதி ஏனம்மே,
யார் நீயெனக் கேட்டேன்.

## அவள்

திருமகள்யான்; எனது சொந்த
தேசமிந்து தேசம்
ஒருவிசனத் தொல்லையென்னை
உருக்குலைத்த தையா!

**நான்**

என்னருமைத் தாயமுதே,
என்னுயிருக் குயிரே,
உன்னுடலை உலைவிசனம்
உடனெனக்குச் சொல்லாய்!

**அவள்**

தக்கவள நாடுமுண்டு,
தங்கவள முண்டு;
மிக்கமுது புகழுண்டு,
மேன்மையெலாம் உண்டு;
மக்களிடை ஒற்றுமையே
மருந்தினுக்கும் இல்லை;
துக்கமென்ன சொல்லிடுவேன்;
சுதந்தரத்தை இழந்தேன்;
இதுவேயென் விசனமையா
என்றுரைத்தாள் அன்னை!

**நான்**

உன்பசிக்கென் உடமையெல்லாம
உதவுகின்றேன் அன்னை
உன்மைந்தர் ஒற்றுமையாய்
உன்னுரிமை காப்பார்

**அவள்**

நன்மைதரும் ஒற்றுமையை
நாடெல்லாங் கொண்டால்
துன்பமில்லை, வறுமையில்லை,
சுதந்தரமாய் வாழ்வோம்.

# 35. தடுப்பவர் யார்?

குந்தலவராளி] [திஸ்ர ஏகம்

தடுப்பவர்கள் யாரினி?—எந்
தாயின் சேவை செய்வதை?
விடுப்பவர்கள் யாரினி
விடுதலை முயற்சியை?

மோகத்தை முனிகுவோம்
முயற்சியை அணிகுவோம்
தியாகத் தீயிலே குதிக்கத்
தாவித் தாவி முன்செல்வோம்

தென்னை வாழை மாபலா
செழுங்கரும்பு நெல்வளம்
அன்னை அள்ளி அள்ளித் தந்தும்
அன்ன மில்லை யென்பதோ?

பொன்னும், சோலைப் பச்சையும்
பொலியு மெங்கள் நாட்டிலே
இன்னமும் வறுமைநோய்
இருப்பதைச் சகிப்பதோ?

உருக்கிய பளிங்குபோல்
ஒளிர்மலை யருவிகள்,
நெருக்கமாங் கனிவளம்
நிறைந்த நாடு நம்மதே.

முப்புறமும் எம்மிசை
முழங்கிடுங் கடலிலே
கப்பல்வாணி கஞ்செயாது
கைகள் கட்டி நிற்பமோ?

சோம்பல்விட் டெழுந்தனம்
சுயமதிப் புணர்ந்தனம்;
நாம்பிறந்த நாடிதே
நமக்குரிய நாடிதே!

# 36. ஏறுபோல

(தேசவீரர் எழுச்சி)

மாண்டு] [ஜம்பை

ஏறுபோலத் தலைநிமிர்
இந்தியாவின் வீரனே,
வீறுகொண்டு நடநட
விடுதலை முரசுடன் (ஏறு)

நடுநடுங்கப் பாதகர்
நண்புகூறச் சாதகர்
கெடுதலெல்லாம் எற்றியே
கீழ்மையை அகற்றியே (ஏறு)

அடிமைக்கட்டு முறிபட
அக்ரமங்கள் சிதறிட
மடமைத்துன்பம் பொடிபட
மங்கலங்கள் பொலிவுற (ஏறு)

கருமவேள்வி நிலவிடக்
கட்சிச்சண்டை விலகிட
தரும ராஜ்யம் இலகிட
சாந்தமெங்கும் பரவிட (ஏறு)

காணுங் கண்ணைப் போலவே
கையுங் கையும் போலவே
ஆணும் பெண்ணும் வாழவே
அழகி னின்பம் குழவே (ஏறு)

# 37. பிறந்த நாடு

நாதநாமக்ரியை] [ஜம்பை

பிறந்த நாடு சிறந்து வாழப்
பெருமை நாட்டுவோம்—உண்மை
அறிந்த தியாக வீரர் சூழ
அச்சம் ஓட்டுவோம்! (பிற)

ஏக்கமின்றித் தூக்கமின்றி
இளைய சிங்கங்காள்—நம்மைத்
தாக்குகின்ற அடிமைப் பேயைத்
தகர்த்து வீசுவோம்! (பிற)

தொத்தடிமைத் துயர் பொறுக்கும்
பித்தர் யாரினி?—சொந்தச்
சொத்தை யாளச் சோம்புகின்ற
சொத்தை யாரினி? (பிற)

வம்பு பேசும் வண்டர் தம்மை
வாயடக்குவோம்—இங்கே
கம்பனுண்டு காந்தியுண்டு
கந்தன் வேலுண்டு. (பிற)

தருமத்திற்கு வெற்றியுண்டு
சத்தியம் உண்டு—நல்ல
கருமவீர சக்தியுண்டு
கண்ணன் வாக்குண்டு. (பிற)

பந்தமற்ற தெய்வ வாழ்வைப்
பார்த்த நாடிதே—எங்கள்
இந்தியாவுக் கெந்த நாடும்
ஈடு நிற்குமோ? (பிற)

# 38. தீரர் வருகவே!

மந்தாரி] [ஏகம்

தீரர் வருகவே
தியாகம் பெருகவே
பாரதத்தாய் விடுதலைக்குப்
பணிகள் புரிகவே! (தீர)

அன்னை வாழ்வே
அறங்கள் வாழ்கவே
தன்னலத்தை விட்ட தூயர்
நன்மை சூழ்கவே! (தீர)

குற்றம் பார்த்திடின்
சுற்ற மில்லையே
ஒற்றுமையால் உள்ளமொன்றி
உரிமை நாட்டுவோம்! (தீர)

இழந்த தெண்ணியே
ஏங்கி டாமலே
பழந்திருவும் புதிய வீறும்
பழகி வெல்லுவோம் (தீர)

இருளைப் போக்குவோம்
இன்ப மாக்குவோம்
அருளைத் தூண்டிப் பொருளைக்
காண்போம்
ஆத்ம சக்தியால்! (தீர)

# 39. செல்வோம்! வெல்வோம்!

(பிரெஞ்சு-லா மார்செய்யேஸ் தழுவல்)

காபி] [திஸ்ர ஏகம்

பல்லவி

எடுங்கள் ஆயுதங்களை
இகற்படையைச் சாடுவோம்!
தொடை நடுங்கும் பேடியார்?
துணிந்த வீரர்முன் செல்வோம்!

(ஓச்சுகள்)

(ஜம்பை தாளம்)

செல்வோம் சுதேசப் புதல்வர்—நம்
சீர்த்தி பெருகுமிந் நாளே
கொல்ப்கை இரத்தக் கொடியைத்—தாங்கிக்
கோபங் குமுறிடக் காணீர்!
நல்லற மக்களை வெட்டிப்—படு
நாசஞ்செய் மோசப் பகையை
வெல்வோம்! பெருமிதங் கொள்வோம்—வாரீர்
வேகமாய்ப் போர்க்களஞ் செல்வோம்!
(எடுங்கள்)

அண்டிய கூலிப் படைகள்—நம்மை
ஆள விதிசெய்ய லாமோ?
தொண்டடிமைசெய்து நாமும்—தேசத்
துரோகிகள் ஆவது நன்றோ?

பண்டு புகழ்பெற்ற நாட்டீர்—இங்கே
பாழ்செய் அரக்கர் நலிய—நம்மைக்
கண்டு நடுங்கக் கொடுங்கோல்—வீரக்
காளைகள் போர்தர வாரீர்!
(எடுங்கள்)

வீரன் ஒருவன் விழுந்தால்—பத்து
வீரர் எழுந்துமுன் நிற்பார்;
போரில் இரத்தத்தைச் சிந்தி—முன்னே
போந்தநந் தோழரை எண்ணி,
வீறுகொண் டேசமர் செய்வோம்—என்றும்
விடுதலை தந்திடும் சக்தி—அடல்
ஏறுபோல் வாருங்கள் சேர்ந்தே!—நம்
ஏற்றம் பெருகிட நாட்டீர்!
(எடுங்கள்)



# 40. சம வுரிமை

மாண்டு]		[திஸ்ர ஏகம்

பொதுவுடைமைத் தத்துவத்தைப் போற்று
[வோம்!
பூமியெங்கும் ஸமதர்மத்தை நாட்டுவோம்!
மதி மயக்கும் வேறு பாட்டை ஓட்டுவோம்!
மனிதராக மனிதரைமுன் னேற்றுவோம்!
(பொது)

பாடுபட்டு வேலைசெய்யும் அன்பர்கள்—இனிப்
பட்டினி கிடப்ப தென்ப தில்லையே!
நாடு முற்று மேதொழிலின் நாதமே!-உண்மை
ஞானமோங்குங் கல்வி நல்குங் கீதமே!
(பொது)

தீனரென்றும் செல்வரென்றும் இல்லையே—
[இனிச்
செருக்கு மிக்க தனியுடைமை இல்லையே!
மானிடர்க்கு மானிடர் சமானமே—இந்த
மண்டலத்திற் கோர்விரிந்த வானமே!
(பொது)

சமவுரிமை என்பதெங்கள் சுவாசமே!—பாழும்
சாதிமத பேதத் தீமை நாசமே!
எமன்வந்தாலும் அச்சமில்லை யென்னுவோம்-
[நாங்கள்
எவ்வுயிரும் எம்முயிரென் றுன்னுவோம்
(பொது)

# 41. பாரத தேசமென்றால்

செஞ்சுருட்டி] [ஆதி

பாரத தேசமென்றால்—இன்பப்
பரவசம் பிறக்குதென் அறிவினிலே
வீரர்கள் காத்த நிலம்—ஞான
வித்தகச் சித்தர்கள் விளங்கு நிலம்
தீரர்கள் ஆண்ட நிலம்—நல்ல
செல்வமும் கல்வியும் செழித்த நிலம்
பாரேல்லாம் வணங்கு நிலம்—தெய்வ
பக்தர்கள் பரமனைப் பாடும் நிலம்! (பாரத)

முப்புறம் கடல்முரசும்—கன்னி
முனைமுதல் கௌரியின் முடிவரையில்,
எப்புறம் பார்த்தாலும்—பச்சை
இயல்வளங் குலுங்கிடும் இனியநிலம்,
கப்பல்கள் சூழ்ந்தநிலம்—கடற்
கரையெல்லாம் பொன்மணி குவிந்தநிலம்
ஒப்பறுந் திருத்தலங்கள்—சுற்றி
ஓமென நதிதவழ்ந் தோடுநிலம் (பாரத)

திரிபுரம் எரித்தவிழி—அரக்கர்
செருக்கினை வீழ்த்திய ராமன்சிலை
குருகுல விஜயன்கணை—கீதை
கொடுத்தநம் கண்ணனின் சுடராழி
முருகனின் திருவடிவேல்—யோக
முனிவரின் பெருந்தவக் கனலுடனே
அருட்கவி வாக்குகளும்—நம்மை
அன்புடன் காத்திடும் அமரநிலம் (பாரத)

# 42. போற்றிசெய்வோம்

பூபாளம்] [சாபு

போற்றி செய்வோம்; புதுமலர் தூவி,
புண்ணியப்புகழ் பாடிப் பணிவோம்!
நாற்றிசைக்கலை வாணருங் கூடி,
நமது தாய்த்திருத் தொண்டுகள் செய்
[வோம்! (போ)

வேத வாணியும் பாரத தேவி,
வீர துர்க்கையும் பாரத தேவி,
மாத வக்கனல் பாரத தேவி,
மங்க லத்திரு பாரத தேவி.... (போ)

சேது தொட்டிம யம்வரை நீண்ட
தெய்வ நாட்டினள் பாரத தேவி,
மோது தென்கடல் முன்வளர்ந் தோங்கும்
மூல சக்தியும் பாரத தேவி.... (போ)

வீரர் வீரமும் பாரத தேவி,
விஜய லட்சுமி பாரத தேவி,
பாரின் அன்னையும் பாரத தேவி,
பாது காவலும் பாரத தேவி.... (போ)

கோடி கோடிச் சிரங்கள் வணங்க,
கோடி கோடிக் கரந்தொழு தேத்தக்
கோடி தேவர்கள் ஆசிகள் கூறக்
கொலு விருப்பவள் பாரத தேவி. (போற்)

# 43. என்று விடுதலை

செஞ்சுருட்டி] [ஆதி

என்று விடுதலை என்று விடுதலை
என்றுளம் ஏங்குதம்மா—அந்த
ஒன்று கிடைத்தாலே நன்றினி வாழுவோம்!
உண்மையி துண்மை யம்மா! (என்)

பான்மை யிழந்து பதங்கெட்டுப் பாரதர்
பஞ்சைக ளானோ மம்மா—எங்கள்
தேன்கனி நாட்டை யிழந்து தெருப்பிச்சை
தேடித் திரிந்தோ மம்மா! (என்)

பொன்னை யிழந்து, புவியை யிழந்து,
பொறுமை யிழந்து விட்டோம்—தாயே
அன்ன விசாரம் அதுவே விசாரமாய்
அன்னியர் வாசல் நின்றோம்! (என்)

தாயே சுதந்தர தாகந் தணிந்திடத்
தாரகந் தேடுகின்றோம்!—எங்கள்
வாயுந் திறக்க வகையின்றி நிற்கிறோம்....
வாழும் வகை தருவாய்! (என்)

இன்று மனிதர் படுந்துயர் எண்ணில்
இதயம் வெடிக்குதம்மா!—அங்கே
கொன்று குவிக்குங் கொடிய பகாசுரர்
கொட்ட மொடுக்கிடுவாய்! (என்)

# 44. விடுதலைத் தெம்மாங்கு

செஞ்சுருட்டி] [ஆதி

விடுதலை தா அம்மா விடுதலை தா—காளீ
விடமாட்டோம் உன்னடியே
படுதுயரம் போதுமினி—தாயே
பாராயோ எம்முகத்தை!
மடமையிருள் வறுமையிலே—நாங்கள்
வாடி வதங்குகின்றோம்—இந்தக்
கொடுமை இனியாகுமோ—உன்
குடிகளன்றோ நாங்களெல்லாம் (1)

கண் பார்த்துக் காத்தருள் வாய்—உன்
கைபார்த்துக் கெஞ்சுகிறோம்;
புண் பார்த்துத் தீர்த்திடுவாய்—எங்கள்
புகழோங்கச் செய்திடுவாய்.
விண் பார்த்து விளை பயிர்போல்—உன்
விரிவான வான்கருணைத்
தண் முகத்தைப் பார்த்து நின்றோம்—ஜய
சண்டி தயாபரியே! (2)

உன்னுருவைக் கண்டவுடன்—நெஞ்சில்
ஊறுதடி வீரவெறி
என்னுயிரின் இன்னமுதே—இந்த
ஏழை முறை கேட்டிடுவாய்....
கண்ணம்மா காளியம்மா—உண்மைக்
காதலுடன் கூவுகின்றேன்....
என்னம்மா என்னரசீ—சக்தி
இன்னும் தயவில்லையோ? (3)

# 45. தருமத்தைக் காத்திடுவாய்

வராளி] [ஆதி

தருமத்தைக் காத்திடுவாய்—வேத
தருமத்தைக் காத்திடுவாய்!
கரும வீரனுக்குக் கீதை யருளிய
கண்ணா நின் சரணம் (தரு)

எட்டெட்டுத் திக்கினிலும்—ஐயோ
எமபடர் சூழ்ந்து கொண்டார்!
வெட்டும் கொலையும் வெறிநடமும் காண
வேதனை செய்குதையே (தரு)

சொத்து சுகங்களெல்லாம்—தினம்
சூறையிட் டெக்களிப்பார்
பித்துப் பிடித்துக் குடித்த பிசாசுகள்
பேய்நட மாடுவதோ! (தரு)

பெண்களைக் கற்பழிப்பார்—சிறு
பிள்ளைகளை வதைப்பார்
புண்களைத் தீர்க்கப் புகலெமக் கில்லையோ
புண்ணியனே சரணம்! (தரு)

தீயினில் வேகுதையே—சு
தேசத்தின் மானமெல்லாம்
ஆயிரம் வீரசிவாஜிகள் வந்தெங்கள்
அன்னையைக் காவாரோ (தரு)

எந்தெந்தக் காலத்திலே—அதர்மத்தின்
இன்னல் பெருகிடுமோ!
அந்தந்தக் காலத்தில் வந்தறந் தாங்கிடும்
ஆண்டவனே சரணம் (தரு)

## 46. எத்தனை காலமாய்

பிலகரி] [சாபு

எத்தனை காலமாய்
ஏங்கித் தவிக்கின்றோம்—சக்தியன்னை
இத்தின மேனுமுன்
சித்தம் இரங்காதோ—சக்தியன்னை.

வீட்டைப் பறிகொடுத்தே
வீதியில் நிற்கின்றோம்—சக்தியன்னை
பூட்டிய சிறையினில்
புண்பட்டுத் தவிக்கின்றோம்-சக்தியன்னை.

துட்டப் பிசாசுகள்
துரத்தி வருகின்றன—சக்தியன்னை
கட்டிய கைகளால்
காரியம் ஆகுமோ—சக்தியன்னை.

கைக்கெட்டும் கஞ்சியும்
வாய்க்கெட்ட வில்லையே—சக்தியன்னை
பொய்கட்டும் வேற்றுமை
பொல்லாங்கு செய்குதே சக்தியன்னை.

வறுமைக் கபந்தன் எம்மை
வாரி விழுங்குகின்றான்—சக்தியன்னை
பொறுமை பொறுமையென்றால்
இன்னும் பொறுப்போமோ-சக்தியன்னை.

சொந்த நிலமிருந்தும்
சோற்றுக்கு தவிக்கின்றோம்-சக்தியன்னை
பந்த விலங்குகளின்
பளுவினித் தாங்கிலோம்—சக்தியன்னை.

பொல்லாத ராக்ஷஸர்
பொட்ட லடிக்கின்றார்—சக்தியன்னை
நல்லவர் தவிப்பதை
நாளும் நீ காண்கிறாய்—சக்தியன்னை.

இரக்கமில் லாதுலகை
இரத்தகள மாக்கினார்—சக்தியன்னை
அரக்கரை ஒழித்தெமக்
கபயம் அருளுவாய் சக்தியன்னை.

கலகஞ்செய் மாயத்தைக்
கட்டுடன் வீழ்த்துவாய்—சக்தியன்னை
உலகெல்லாம் உன்குலம்.
ஓங்கிடத் தயவுசெய்—சக்தியன்னை.



# 47. காளி உபாசனை

சிந்து பைரவி] [ஆதி

கலக்கந் தவிர்த்து வெற்றி யீவாய்—ஓம்
காளி சரணம் ஜயசண்டி!
அலக்கண் அழிக்கும் அருள் அம்மே—உன்
அன்பர்க் கபஜயமும் உண்டோ !

வீரக்கனல் பெருக வேண்டும்—தோள்
விம்மிப் புடைத்துயர வேண்டும்
பாரைச்சுமந்து புரந்தோங்கும்—சக்தி
பாலித்தருள் ஜய பவானி!

கொற்ற சிவாஜியைப் போலே—குரு
கோவிந்த சிங்கனைப் போலே
மற்றொரு விஜயனைப் போலே—ரண
மல்லர் படை திரளவேண்டும்

தர்மம் செழித்தோங்க வேண்டும்—அ
தர்மம் வீழ்ந்து படவேண்டும்.
கர்ம யோகமென வாழ்வை—நாங்கள்
கண்ணன் வழி நடத்த வேண்டும்.

மலையைத் தகர்த் தெறியும் புயமும்—எதிர்
மாற்றார் நடுநடுங்கும் உரமும்—வீரக்
கலையில் மிகப்பழகுங் கையும்—உன்
கருணைத் திருநகையும் தாராய்!

கூற்றும் கிட்ட வரலாமோ—அணு
குண்டும் சுட்டெரிக்கலாமோ!—உன்
ஆற்றலும் ஆசியுமிருந்தால்—நாங்கள்
அமரத் தன்மையுடன் வாழ்வோம்!

இந்திர வஜ்ஜிரத்தைப் போலே—உடல்
இறுகித் திறமையுடன் விளங்க.
கந்தன்போல் அரக்கரை அழிக்க—வெற்றிக்
கனலைத் தருவாய் ஜய காளீ!

# 48. வாழிய பாரதமே

மால்கோஸ்] [தேசாதி

வாழிய பாரதமே—நாங்கள்
வாழ்திருத் தாய்நிலமே!
ஆழியும் வானமும் பூமியும் போலவே
வாழ்க சுதேச நலம்—என்றும் (வாழிய)

பாரில் உயர்ந்த நிலம்—தங்கம்
பச்சை செழித்த நிலம்
பூரண யோகமும் போகமும் போற்றிடும்
புண்ணிய விண்ணகமே (வாழிய)

ஆனந்த வேத நிலம்—மலை
அருவிகள் பாடு நிலம்..
தேன்பொழி சோலையில் ஞான சங்கீர்த்தனம்
தென்றலைக் கொஞ்சு நிலம்! (வாழிய)

வண்மை மிகுந்த நிலம்—அருள்
வாக்கு மலர்ந்த நிலம்! [றிய
பெண்மையும் ஆண்மையும் கண்கருத் தொன்-
பேரின்பக் காதல் நிலம்! (வாழிய)

கொள்ளக் கொள்ளக் குறையா—நிதி
கொட்டிக் குலுங்கு நிலம்;
ஒள்ளிய கல்வியும் தெள்ளிய கலைகளும்,
ஓங்கி வளர்ந்த நிலம்! (வாழிய)

வெள்ளி மலைப்பரமன்—கடல்முனை
வீற்றிருக்கும் குமரி
வெள்ளம்போல் ஆத்தும சக்தி யளித்திட
வெற்றி முழங்கு நிலம்—நீடு (வாழிய)

# 49. ஜயமுரசம்

மந்தாரி]                                        [தேசாதி

தடதட வெனவே
    ஜயமுர சடிப்போம்
இடிபுயல் உருமும்
    கடலென எழுந்தே!    (தட)

கொல் கொடுங் கோன்மை
    இல்லையென் றாக்கி
நல்ல வல் லரசை
    நாட்டிட வீரர்    (தட)

மதுவெறி போன்ற
    மதவெறி யின்றிப்
பொது நெறி வாழப்
    பூவுல கெல்லாம்    (தட)

பகைசின வஞ்சப்
    பதகர் நடுங்கத்
தகைபெறு நேர்மை
    தழைத்திட வுலகில்    (தட)

அன்னிய மாயம்
    அடியுடன் ஒழிய
தன் சுய வுரிமை
    தடையறத் தழைக்க    (தட)

அதர்மத்தை அழிப்போம்
    ஆண்மையை வளர்ப்போம்
சுதர்மத்தைக் காப்போம்
    சுதந்தரத் தோழர்    (தட)

# 50. துள்ளித் துள்ளி

காம்போதி] [ஆதி ஏகம்

துள்ளித் துள்ளிப் பாய்ந்தே—வானிற்
சொக்கு மின்னல் போலே
நள்ளிரவைப் பிளந்தே—வீர
நாதபேரி கொட்டி
கள்ள மாயப் பகையை—நாம்
கட்டுடன் எதிர்த்தே - வீர
உள்ளங் கொண்டெழுந்தே—மனிதா
உரிமை தன்னைக் காப்போம் (துள்)

பழைய வீண்கனவை—வெறும்
பயனில்லாத சடங்கை,
விழலென ஒதுக்கி—நாம்
வீறுகொண்டு நிற்போம்.
வழவழாக்க ளின்றி—நெஞ்சில்
வாய்மை கொண்டுழைப்போம்
இளைய முறுக்குடன்வா—மனிதா
இவ்வுலகை வெல்வோம்! (துள்)

கூசிக்கூசிப் பதுங்கும்—முயல்போற்
கோழை யாவதேனோ?
வீசிவீசி மின்னும்—ஜய
வீரன் வாளைப்போலே,
நாசமாகத் தீமை—உலகில்
நல்லதெல்லாம் ஓங்க - நாம்
நேசங்கொண்டுழைப்போம்—மனிதா
நேர்மையாகச் சேர்ந்தே (துள்)

# 51. நன்மை செய்வோம்

கரகரப்ரியா] [ஜம்பை

போட்டியின்றிப் போலிகளின்
பொய்நடையும் இன்றி
நாட்டினுக்கே பொதுவான
நன்மைகளைச் செய்வோம். (போ)

காரமான வசைகளின்றிக்
கட்சிச்சண்டை யின்றி
வீரமான ஒற்றுமையால்
விடுதலையைக் கொணர்வோம். (போ)

வகுப்புவாதப் பித்தமின்றி
மதமயக்க மின்றி
தொகுப்புடனே ஒருகுலமாய்த்
தொண்டுகளைச் செய்வோம். (போ)

தோட்டிமுதல் மன்னர் வரை
சுயஉரிமை யுடனே
பாட்டாள ராகிவரும்
பலனைக் கூடி யுண்போம்! (போ)

வஞ்சமின்றி, சூழ்ச்சியின்றி
வசைபுராண மின்றி,
நெஞ்சுருகும் அன்புடனே
நேர்மையாக நடப்போம்! (போ)

# 52. புதிய ஹிந்துஸ்தானம்

சௌராஷ்ட்ரம்] [திஸ்ர ஏகம்

புதிய ஹிந்துஸ் தான மென்றும்
புகழ்பெற் றோங்கவே
சுதந்தரக் கதிர்கள் வீசிச்
சுடர்பெற் றோங்க வே! (புதிய)

காற்றிலெங்கும் ஜயமுரசம்
கலந்து வீசவே
நாற்றிசையும் ஞான வேத
நாதம் பொங்கவே! (புதிய)

பூத்த காலை அழகு போலப்
பொலிவுற் றோங்கவே,
ஆத்ம சக்தி யருவி பெருகி
அறம்வளர்க வே! (புதிய)

தெள்ளறிவி னாற் கவலை
தீர்க்குந் தேசமே!
உள்ளமெல்லாங் கருணை யாக
உதவுந் தேசமே (புதிய)

ஏகமான வாழ்க்கை யெல்லாம்
இன்ப மாகவே
சோகமோக மின்றி வாழத்
துலங்கு நாடிதே! (புதிய)

# 53. வீறுபெற்று நில்லடா

ஜ்க்தலவராளி] [ஜம்பை

வீறு பெற்று நில்லடா !
விதியை மீறிச் செல்லடா !
ஊறும் வீர சக்தியால்
உலகை முற்றும் வெல்லடா!

உச்ச மான வானிலே
உலாவுங் காற்றை மானவே
அச்சமற் றுலாவுவோம்
அமுதவிண் ணிலாவிலே !

பனிமலர் குலுங்கிடும்
பவளக் காலை போலவே,
கனி முறுவல் பூத்துநம்
கடமை செய்ய முந்துவோம்!

திருவுடன் உலகெலாம்
செழித்திடப் பவனிசெல்
பருவ காலம் போலவே
பயன்பழுக்க வாழுவோம்!

பண்மலர்கள் சூட்டியே
பரமனைக் கலந்து நாம்
கண்மலரி லேமனக்
கருணை பொங்க வாழுவோம்.

# 54. தலைநிமிர் தமிழா!

காபி] [ரூபகம்

1. தலைநிமிர் தமிழா—பெற்ற
தாயின் மனங்குளிர!
மலைகுலைந் தாலும்—தமிழா
மனங் குலையாதே! (தலை)

2. வீரக்கனல் வளர்ப்போம்—ஆண்ம
வீறுகொண்டே யுழைப்போம்
சூரத்துணி வொடுநில்—தமிழா
சொந்த உரிமையை வெல் (தலை)

3: குன்றினுயர் தோளா—ஓங்குங்
குவலயத் தோழா....!
வென்றிமேல் வென்றி பெற்றே—கால
வேகத்தை யாண்டிடுவோம்! (தலை)

4. இசைக்கொழுந்தேறி—விண்ணை
யெட்டிப் பிடித்திடுவோம்
திசை முனைகளெல்லாம்—தமிழ்க்கொடி
திகழ நாட்டிடுவோம்!

5. காலக் கடலினிலே—வாழ்வுக்
கப்பலை முன்செலுத்தி,
ஞாலத் திரைகளெல்லாம்—அளப்போம்
நல்ல புகழ்பெறுவோம்! (தலை)

6. கன்னித் தமிழென்றால்—சக்திக்
கனல் பிறக்குதையே!
அன்னையி னன்பினிலே—உயிருக்
கமுதம் ஊறுதையே! (தலை)

7. ஞானச் சிங்காதனம்வைத்—தன்னையை
ஞாலமெல்லாம் தொழுவோம்;
வானொளிர் மீனணியால்—வெற்றி
வாகை புனைந்தணிவோம். (தலை)

8. தமிழ்த் திருமுறைமுன்—உலகம்
தலைவணங்க வைப்போம்....
தமிழ கத்தினிலே—யுலகின்
தாயகஞ் சமைப்போம். (தலை)

9. போட்டி பொறாமை யற்ற—இன்பப்
பொதுநிலை வகுப்போம்
நாட்டின் இருள் வறுமை—நலிய
நாளும் பணிபுரிவோம். (தலை)

10, ஒற்றுமைச் சங்கொலிப்போம்—தூய
உண்மைக் குயிர்கொடுப்போம்
வெற்றி முரசடிப்போம்—ஆன்ம
வீறுகொள் மெய்த் தமிழா! (தலை)



# 55. புரட்சிசெய் தமிழா

மாண்டு] [ஏகம்

பல்லவி

புரட்சிசெய் தமிழா—வீரப்
புரட்சிசெய் தமிழா (புர)

அநுபல்லவி

திரட்சியாக ஒன்று கூடித்
தீந்தமிழின் கொடியை ஏந்திப் (புர)

சரணம்

திண்மையான உறுதி கொண்டு
தீரனாகத் தலை நிமிர்ந்து,
உண்மை வாழப் பொய்மைவீழ
உடலும் உயிருங் கடமைக் கீந்து (திர)

சாதி சமயப் பித்தந் தணியச்
சமரஸத்தின் அன்பு பொழிய,
தீதி லாத செந்தமிழின்
தெய்வக்கலைகள் சீர்பெற் றோங்கப் (புர)

நமது நாடு, நமது வீடு,
நமது தமிழர், நமது கூட்டம்,
நமது பாட்டு, நமது செல்வம்,
நமது சக்தி வாழ்க வென்றே. (புர)

# 56. தமிழ் வீரர் பாட்டு

செஞ்சுருட்டி] [ஜம்பை

செந்தமிழ் மொழி தந்த பராபரன்
சிந்தனையுடன்—முந்துவோம்.
கொந்த ளித்திடும் வீறுடன் பேரிகை
கொட்டுங்கள்—விண்ணை—எட்டவே.

வைய மெங்குந் தமிழ் முழக்கம் செய்ய
வாருங்கள்—ஒன்ருய்ச்—சேருங்கள்.
கைகள் செந்தமிழ் ஆலயங் கட்டிடக்
காணுங்கள்—வெற்றி—பூணுங்கள்.

தேனின் இனிய தெய்வத் தமிழ் இசை
தேறுவோம்—நலம்—கூறுவோம்.
நானி லத்திலும் தாயின் மணிக்கொடி
நாட்டுவோம்—வீரம்—காட்டுவோம்.

அப்பர் சுந்தரர் சம்பந்தர் போற் பணி
ஆற்றுவோம்-நலந்-தோற்றுவோம்.
ஒப்புயர் வற்ற வள்ளுவர் வேதத்தை
ஓதுவோம்—சங்—கூதுவோம்.

துங்க மான தமிழ்மொழி யாவிற்கும்
தொன்மொழி—பூவின்—முன்மொழி
தங்க மான தமிழ்மொழி நந்திருந்
தாய்மொழி—தேவர்—வாய்மொழி.

கொற்ற வீரக் குரிசில்கள் யாவரும்
கூடுவோம்—வாகை—சூடுவோம்
ஒற்றுமை யுடன் ஒக்கும் புதுத்தமிழ்
உலகினைச்—செய்வோம்—இலகவே

துள்ளித்துள்ளி துடிதுடித் தன்புசெய்
தொண்டர்முன்-பகை-அண்டுமோ?
வெள்ள மாகப் பெருகும் சுதந்தர
வேகமும்—பழு தாகுமோ?

துணிந்த வீரத் தமிழர் திருப்படை
தூங்கவோ—பின்—வாங்கவோ?
அணிந்த போரின் அதிசய வெற்றிகள்
ஆக்குவோம்—கொடி—தூக்குவோம்.
(செந்தமிழ் மொழி தந்த பராபரன்)



# 57. தமிழிசை வளர்ப்போம்

ஆனந்தபைரவி] [ஆதி

பல்லவி

தமிழிசை போற்றுவோம் வாரீரே
தாயன்புடன் ஒன்றாய்ச் சேரீரே

அநுபல்லவி

இமயமலை முதல் குமரிமுனை மட்டும்
அமுதினும் இனிமையாம்
நமது தமிழ் முழங்கத் (தமி)

சரணம்

அருட்பெருங் கவிகளை
அள்ளி யளித்த தமிழ்
ஆயிரம் ஆயிரம்
ஆண்டுகள் வாழுந்தமிழ்
இருளினில் இன்னமும்
ஏங்கப் பொறுப்போமோ?
இன்னொரு மொழிக்காளாய்
அன்னையை மறப்போமோ? (தமி)

கையில் வெண்ணெய் இருக்க
நெய்யென் றலைவாரோ?
கனகக் குவை யிருக்கக்
கைப்பிச்சை புகுவாரோ?
செய்யில் விளைவிருக்கச்
சேவகஞ் செய்வாரோ?
தீந்தமிழ் உரிமையைத்
திசைமொழிக் கீவாரோ? (தமி)

# 58. தமிழ்வாக்கு வாழ்க!

ஆரபி] [ரூபகம்

சிற்றம்பலப் பொதுவில் வளர்
சிவ மங்களம் வாழ்க!
உற்ருர் மன விருளோடிட
ஒளிரும் குரு வாழ்க!

பெற்ருர்பெரு மகிழ் வெய்திடும்
பெம்மான் அருள் வாழ்க!
கற்ருர்க் கினிதாகும் வர
கவி வாக்குகள் வாழ்க!
வாஞர் சுவை வளரும் திரு
மணி வாசகம் வாழ்க!

ஆனைபே ரின்பந் தரும்
அப்பர் மொழி வாழ்க!
தேஞர் திருப்புகழ் வாழிய
திருவாய் மொழி வாழ்க!
நாஞெனு ஞானந் தரு
நாதன் மறை வாழ்க!

புவி போற்றிடும் பொய்யா மொழிப்
புலவர் குறள் வாழ்க!
கவி மன்னவன் கம்பன் அமை
கலை மாளிகை வாழ்க!

## தேசிய கீதம்

தவ யோகினி ஔவை நலந்
தரு நீதிகள் வாழ்க
நவ பாரதப் புலவர் தரு
நன் மாலைகள் வாழ்க!

சிந்தாமணி மணிமேகலை
சிலம் போடுயர் அணிகள்
நந்தா வுலகிசை மாலைகள்
நாளும் பல சூடி.
எந்தாய்புக ழேந்தப் பணி
ஏந்துந் திரு வாளர்
சிந்தை செயல் வாக்கில் அருட்
சிகரச் சுடர் வாழ்க!



# 59. நல்ல கவி யார்?

ஆசை மலர்களினால்—உலகை
அழகு செய்திடுவான்?...
ஓசைக் கலையாலே—நாட்டை
ஒற்றுமை யாக்கிடுவான்.

இயற்கை யுள்ளத்திலே—இலகும்
இனிய உண்மைகளால்
செயற்கை வாழ்வினிலே—இன்பந்
திகழ வைத்திடுவான்.

முதிய தீமையெல்லாம்—கனல்
மூட்டிச் சுட்டெரிப்பான்
புதிய நன்மைகளை—வசந்தப்
பொலிவுறப் படைப்பான்...

உரிய நாட்டினிலே—விடுதலை
ஒளிரப் பாடிடுவான்
அரிய சொற்களினால்—பல
அற்புதஞ் செய்திடுவான்...

அந்தக் கவிப்புலவன்—உண்மை
அன்புக் கவிப் புலவன்
எந்த வுலகினிலும்—இசை
ஏறிச் சிறந்திடுவான்...



# 60. வள்ளுவர் வேதம்

நாத நாமக்ரியை] [மிஸ்ர ஏகம்

வள்ளுவர் செந்தமிழ் வேதம்—அது
மானிடர்க்கெல்லாம் பொதுமறையாகும்
உள்ளத்தில் ஒன்றி யெல்லாரும்....இதை
ஓதி ஒருகுல மாகநாம் வாழ்வோம் (வள்ளு)

சாதிமத பேதமில்லை—தூய
சன்மார்க்க சாதனம் சாற்றுங் குறளை
மேதினி யெல்லாம் பயின்றால்—மிக
மேன்மையாய் வாழலாம் மானிடரெல்லாம்.

அன்பும் அறமும் பொருளும்—வீர
ஆற்றலும் காதலும் போற்றிப் பொலியும்
இன்பத்திலே இருபாலார்—கூடி
இல்லறம் செய்திட நல்வழிகாட்டும். (வள்ளு)

ஒப்புயர்வற்ற தமிழர்—பெற்ற
ஒப்புயர்வற்ற உயர்பெரும் வேதம்
முப்பாலை அள்ளிக் குடிப்போம்—எங்கள்
முத்தமி ழுக்கு ஜெயமுர சடிப்போம். (வள்)



# 61. நமது கம்பன்

கொட்டுங்கள் முரசம் வெற்றிக்
கொடிகளைப் புகழின் வானம்
எட்டிட உயர்த்தி டுங்கள்!
இணையிலா நமது கம்பன்,
கட்டினன் கவிதைக் கோயில்
கனிதமிழ் அணங்கு வாழ....
விட்டது சிறுமை யென்று
விழாவணி முழக்கு வோமால்!
எல்லையில் அழகை யெல்லாம்
இனிதுற முகந்து, நல்ல
சொல்லமு துடனே ஆழ்ந்த
சுவைதரு பொருளுங் கூட்டி,
கல்வியிற் பெரிய கம்பன்
கற்பகக் கவிதை தந்து,
பல்கலை யுலகு போற்றும்
பரிதியாய் விளங்கி னானே!
தன்னிக ரில்லாக் கம்பன்
தமிழினைச் சுவைக்கும் போது,
பொன்முடி சூடியெந்தாய்
புகழ்முடி பொலியக் காண்போம்.
பன்னெடுங் கலைக ளெல்லாம்
அவளடி பணியக் காண்போம்
இன்னுயிர் சிலிர்க்கும் உள்ளம்;
இன்பவீ டாகும் வாழ்வே!

# 62. அருட்சோதி வள்ளலார்

ஊனுருகி, உயிருருகி, உள்ளுருகிப்
பாய்ந்தின்ப வூற்றெ டுக்கும்
தேனருவி யாகிவளர் சிவஞானத்
திருவருட்பா செழித்த வூற்றை,
மானவர்க்குப் புதுவழியும் புதுயுகமும்
புதுவாழ்வும் வழங்கி னனை,
வானரசைக் கொணர்ந்தானைத் துரியவள
நாட்டரசை வழுத்தி நிற்பாம்.

பித்துலகர் பிதற்றுகின்ற மதவாதச்
சூதுகளைப் பிறகிட் டோட்டிச்
சுத்தான்ம வொருப்பாட்டின் உரிமைநெறி
முதன்முதலிற் றுலக்கி னனைச்
செத்தவரை யெழுப்புகின்ற ஞானசஞ்
சீவியினை, அமர வாழ்வின்
வித்தகனும் ராமலிங்க வேதியனை
நினைந்துருகி வீறு கொள்வோம்.



# 63. பாரதி

புன்னாகவராளி] [ஆதி

மெல்லிய தங்கக் கொடியிலே—பூத்த
வீர விழிக்கனல் கொண்டவன்
சொல்லின் உணர்ச்சியைத் தூண்டியே—
[துள்ளித்
துள்ளிக் குதித்திடும் பாடகன்.

அச்சமில்லை யெனப் பேசிடும்—வாள்
ஆயுதம் போல்வளர் மீசையான்
துச்ச அடிமைப் பிழைப்பினை—தூ
தூவெனச் சொல்லிடும் வாயினான்.

சாதிகள் பொய்யெனச் செப்புவான்—எங்கும்
சமரஸ பேரிகை கொட்டுவான்
வீதியிலும் கவி பாடியே—அவன்
வீரச் செருக்குடன் செல்லுவான்.

பண்டிதர் கொண்ட தமிழினை—நாட்டில்
பாமரரும்பெறச் செய்தனன்
பெண்டிர் நிமிர்ந்து நடக்கவே—அ
பேதவாதங்களைப் பேசினான்.

தீரன் அறிவிற் சிறந்தவன்—புதுத்
தீர்க்க தரிசி வரகவி
வீர சுதந்தர சக்தியே—இவன்
வேடம் புனைந்ததென் றோதுவோம்,

மங்கிக் கிடந்த தமிழுக்கே—மறு
மலர்ச்சி வேகம் அளித்தனன்.
பொங்குக பாரதியின்புகழ்—அவன்
போற்றிய செந்தமிழ் வாழ்கவே!

## காலத்தை வென்ற கவி

அச்சத்தை ஓட்டி அடிமைத் தளைபோக்கித்
துச்ச நினைவுகளைத் தூரறுத்து—மெச்சவே
ஞாலப் புகழோங்க நாட்டை எழுப்பினன்
காலத்தை வென்ற கவி.

எல்லாரும் ஓர் குலமே என்று முரசடித்துப்
பொல்லாத வேற்றுமையைப் போக்கினன்—[சொல்லின்
அருவியாய் வந்தான் அமரகவி; வீரத்
திருவில் வெடித்தெழுந்த தீ.



# 64. தாகூர் வாணி

இராகம்: கல்யாணி] [ஆதி தாளம்

ஜய ரவீந்திர, வரக வீந்திர
தாகூர் வாணி வாழ்கவே!
பயமில் லாத சுதந்த ரத்தில்,
பரமா னந்தப் பண்கள் பொழிந்த (ஜய)

கட்டில் லாத கடலைப் போலக்
கர்ஜிக்கும் கவி வாணி;
தட்டில் லாத கங்கை போலத்
தாவிப் பொங்கும் காவியநதி (ஜய)

கொஞ்சுங் கிளியுங் கூவுங் குயிலும்,
குதிக்கும் மயிலும் போலே,
செஞ்சொல் இசையுந் தெளிந்த நடையுஞ்
சேர்ந்து திகழுந் தெய்வ வாணி (ஜய)

இடியும் புயலும் போலப் புல்லர்
இகலைப் புடைக்கும் வாணி;
அடிமைத் துயரை வேரோ டறுத்தே
அமர ஞானம் அளிக்கும் வாணி (ஜய)

அருளும், பொருளும், அழகும், அன்பும்
அமைந்த ஜீவ வாணி;
கருடன் போலக் ககன வெளியில்
களித்துப் பறக்கும் கடவுள் வாணி (ஜய)

தலை நிமிர்ந்து பரத நாடு
தழைக்க வுதித்த கவிதை;
கலை யுலகம் வியந்து போற்றக்
கதிர்கள் பரவும் புதுமை வாணி (ஜய)

# 65. சுதந்தர உதயம்

சாவேரி ராகம்]	[ஆதி தாளம்

பல்லவி

எழுந்தது சுதந்திர பாரத சூரியன்
எல்லாரும் இன்புறவே (எழுந்)

அநுபல்லவி

அழுந்தும் அடிமையிருளச்சந் தவிர்ந்தன
ஆயிரங் கதிர் வீசித் தாயின் புகழ்பெருக! (எழு)

சரணம்

பரம ஹம்ஸ வேதம் பரவி யொலித்தது;
பாரெல்லாம் வேதாந்தச் சிங்கம் கர்ச்சித்தது
வரம் பெற்ற அருட்சோதி வாசகம் பிறந்தது
வான் மணம் வீசி யரவிந்தம் மலர்ந்தது! (எழுந்)

வாழி லோகமானியர் வேள்வித்தீ மூட்டினர்
வந்தேமா தரமென்ற மந்திரப் பாட்டினால்;
சூழ்ந்து சுதேச பக்தர் சொரிந்தனர் ஆகுதி;
தூய சுடர் பொலியத் தோன்றினர் காந்தி-
[மஹான் (எழுந்)

வேந்தரும் குடிகளும் வேற்றுமை யற்றனர்
வெவ்வேறு வகுப்பினர் ஒற்றுமை யுற்றனர்;
சாந்த மணம் பரவச் சத்தியம் கனிந்தது;
சகமெல்லாஞ் சன்மார்க்க சாதனம் விரிந்தது!

அறவலி வென்றது, மறவலி வீழ்ந்தது;
ஆத்மசக்தியாலே அக்ரமம் ஒழிந்தது
துறந்து துய்க்கும் உண்மை தோய்ந்தது-
[வாழ்வினில்;
சுகமருளும் சுய ராஜ்யமும் வாய்ந்தது! (எழுந்)

# 66. பரம ஹம்ஸ வந்தனம்

இராகம்: பிலஹரி] [ஆதி தாளம்

பல்லவி

ஜய ஜய ராமக்ருஷ்ண—பரம ஹம்ஸ
ஸத்குருவே சச்சி தானந்த ஜோதியே (ஜய)

அநுபல்லவி

பயமிருள் அகந்தையின் பந்தத்தை நீக்கியே,
பாரதரை ஆத்ம தீரர்கள் ஆக்கிஞய் (ஜய)

சரணம்

சத்திய ஞானமும், சாதுக்கள் சங்கமும்,
சஞ்சல மில்லாத நெஞ்சமும் அருளுவாய்,
சக்தி மஹாகாளி தந்த ஜீவன் முக்தனே!
சமய பேதங்கடந்த சமரஸ சித்தனே (ஜய)



# 67. வேதாந்த கேசரி

இராகம் தோடி] [தாளம் ஆதி

பல்லவி

வேதாந்த கேசரியே விவேகானந்தா
வேதாந்த கேஸரியே...

அநுபல்லவி

ஜோதிஸ்வரூபா குணா
தீதா ஞானப்ரபோதா (வேதாந்த)

சரணம்

வீரா—மாயையைவென்ற
தீரா—பயத்தைக்கொன்ற
சூரா—உலகிற்குப
காரா—கருணைக் கடலே........
பாரத—தேசத்தின் சீரோங்கிடவே தெய்வத்
தாரகமாக வந்த பூரணனே வணக்கம் (வே)

அத்தா—பரமபரி
சுத்தா—ஸ்ரீ ராமக்ருஷ்ண
பக்தா—நித்தியஜீவன்
முக்தா—முனிவர்க்கரசே...
தத்வமஸிஓம் என்னும் அத்வைத தீபமேற்றி
வைத்தாய்-உலகுபோற்றும்-சித்தர் சிங்கமே-
[ஜய (வேதாந்த)

# 68. தயானந்தர்

பேஹாக்] [ஆதி

வந்தனை செய்திடுவோம்—தயானந்த
வள்ளலை வாழ்த்திடுவோம்!
சிந்தனை செய்திடுவோம்—அவன்வழி
தேசப்பணி புரிவோம்! (வந்)

தீரர்களைப் படைப்போம்—திருவருட்
செல்வர்களைப் படைப்போம்
பூரணரைப் படைப்போம்—பொதுநலப்
புண்ணியங்கள் புரிவோம் (வந்)

வேதம் முழங்கிடுவோம்—வீடுதோறும்
வேள்விக்கனல் வளர்ப்போம்—ஞானச்
சோதியைத் தூண்டிடுவோம்—அத்யாத்ம
சுதந்தரம் பெறுவோம் (வந்)

கல்வி பரப்பிடுவோம்—குருகுலங்
கண்டு நலம் புரிவோம்
வெல்லுந்திறல் வளர்ப்போம்—பிரம்மச்சர்ய
வீறு மிகப் பெறுவோம் (வந்)

அன்பை வளர்த்திடுவோம்—அதுவே
ஆரியரின் சிறப்பாம்—கலைப்
பண்பை வளர்த்திடுவோம்—சமரஸப்
பான்மை வளர்த்திடுவோம் (வந்)

## 69. லோகமான்ய திலகர்

கமாஸ்] [ரூபகம்

போற்றி போற்றி லோக மான்ய
திலக போற்றி போற்றியே—
நாட்டினுய் சுதந்திரக்
கொடியை யிந்த நாட்டிலே; (போ)

பாரத விடுதலைக்குப்
பாய்ந் தெழுந்த சிங்கமே!
மாரதத் தவமுனியே
வாழ்க வாய்மை போலவே! (போ)

அடிமைப் பேயைச் சுட்டனை யெம்
அச்சம் போக்கி விட்டனை....
கொடுமையைக் குமைத்தனை—வெங்
கூற்றையும் எதிர்த்தனை! (போ)

பீடுறும் ஸ்வராஜ்யமே
பிறப்புரிமை யென்றனை;
நாடுணர்ந் தெழுந்து நிற்க
நாளுந் தொண்டு செய்தனை (போ)

ஆற்றலிற் சிறந்தனை
அறிவினிற் சிறந்தனை
நோற்றனை சுதேசம் வாழும்
நோன்பைக் கர்ம வீரனே! (போ)

சிறைகளைப் பொறுத்தனை
சிரித்தனை யிடர்களை
மறையொளியைத் தூண்டினை
மனத்திறல் படைத்தனை (போ)

உண்மைக்கே யுயிர்த்தனை
உலாவுங் கீதை யாயினை
எண்ண வெண்ண வுன்னை நெஞ்சில்
ஏறுந் தேசா வேசமே! (போ)

## 70. லாலாஜி

செஞ்சுருட்டி) (ஜம்பை

அஞ்சாத நெஞ்சுரத்தான்,
ஆண்மைத் திருவாளன்,
பஞ்சாபின் சிங்கமவன்
பார்புகழும் லாலாஜி

அச்சமில்லை யென்றெதிரே
ஆர்வமுறப் பேசிநிற்கும்
உச்சப் பெருவடிவோன்
ஓங்குமறி வாளனவன்

கல்விக் கடலானுன்
கற்பகமே கையானுன்
சொல்லுஞ் செயலுமொன்ரும்
சோர்வில்லா வீரனவன்

தாய்நாட்டின் கட்டவிழத்
தாகங்கொண் டேயுழைத்தான்
வாய்மைக்கே தன்னுயிரை
வைத்துப் பணிபுரிந்தான்.

நாடெனது தாய்தந்தை
நாடெனது வீடெனவே
நாடித் துடிக்குமந்த
நல்லோன் உயிர்நாடி

வீழ்ந்தோர்க்குக் கைகொடுப்பான்
வேற்றுமையைப் போக்கிடுவான்
ஆழ்ந்தோங்குஞ் சிந்தனையான்
அன்புக் கடலனையான்.

அந்தமான் சிறைகாத்தான்
அமெரிக்கா சென்றுறைந்தான்
இந்திய விடுதலைக்கே
இன்னுயிரைப் பலிகொடுத்தான்.

பந்தனைகள் சிந்தியெந்தாய்
பாரொளியாய் வாழுமட்டும்
சந்ததமும் லஜபதிராய்
சத்தியம்போல் வாழியவே!



# 71. அரவிந்தர்

அமீர்கல்யாணி] [ஆதி

வாழ்க அரவிந்தன்! வாழ்க பராசக்தி
வல்லபன் வாழியவே!
வாழ்க மஹாயோகி! வாழ்க மஹாஜோதி
வாழ்க ஜகத்குருவே! (வாழ்க)

ஏழுணர் வோங்கிய இன்பச் சிகரத்தில்
ஏறிய சித்தனவன்!
சூழிருள் அச்சந் துடைத்திட விக்ஞான
சூரியன் போல் எழுந்தான் (வாழ்க)

வானர சாட்சியிம் மண்ணுல கத்திலே
வளர்ந்து செழித்திடவே!
தேனருவியென மோனத்தி லேநின்று
தெய்வக் கனல் பொழிந்தான். (வாழ்க)

மானவ ஜாதியிங்கு அமரநிலைபெற
வாழும் வகையளித்தான்;
போனது கலியுகம், பூத்தது புதுயுகம்!
பூரணன் வாழியவே! (வாழ்க)



# 72. வீர சிதம்பரம்

வீர சிதம்பரம் பிள்ளை—தமிழ்
வித்தகன் முத்தமிழ் நாட்டில்
பாரத பக்திக் கனலைத்—தூண்டிப்
பாய்ந்து பணிசெய்ய வந்தான்
தீரன் இவனைப்போ லுண்டோ?—தமிழ்ச்
சிங்கம் திலகர் வலக்கை
சோர்வின்றி நாட்டுக் கொடியைப்—பல
தொல்லையைத் தாங்கிப் பிடித்தான் (வீர)

எங்கள் சிதம்பரம் என்னில்—வீரம்
ஏறுது; நெஞ்சினிற் சோருது துன்பம்
பொங்குதோர் ஆவேச வெள்ளம்—தளை
பொட்டென் றறுந்து விடுதலை சேர
வங்கம் அழைக்குது நம்மை—அதில்
வாழி சிதம்பரம் என்றிசைத் தாடும்
தங்கக் கொடிதோன் றுதையே—தமிழ்
தந்த சிதம்பரம் சந்ததம் வாழ்க! (வீர)

விடுதலை பெற்றெங்கள் அன்னை—ஜய
வீரத் திருமுடி சூடி,
நடுநிலை நாட்டுமந் நாளில்—வெற்றி
நல்கிய தீரர் பெயரை
இடிமுர சார்த்திடு நாளில்—"வாழி
எங்கள் சிதம்பரம்" என்போம்—நாட்டுக்
கொடியைவிண் ணெட்டப் பிடிப்போம-அவன்
கொற்ற மலர்கள் சொரிவான்! (வீர)

# 73. ஐயர் நினைவு

காபி] [ஆதி

தலை சிறந்த தமிழ்மணி ஐயர்
 தணலும் வீரச் சிகாமணி ஐயர்;
கலை சிறந்த கவிமணி யான
 கம்பன் வாக்கினில் இன்புறும் ஐயர்.

சிலை வடித்த திருத்தகு மேனி
 தீரப் பார்வை, திரண்ட புயங்கள்,
மலைமுடி யென மாண்புறு தோற்றம்;
 வைரம் பாய்ந்த வலிவுடை ஐயர்.

முனியைப் போன்ற முகப்பொலி வாளர்,
 முரளி போன்ற குரலினி தாளர்;
கனியைப் போன்ற கவின்மொழி வல்லார்;
 கலை சிறந்த கதிர்விழி யாளர்.

திருக் குறளைச் சகத்தினுக் கீந்தார்;
 சிந்தை செய்கை சுதேசத்திற் கீந்தார்;
செருக்கி லாத தலைமை சிறந்தார்,
 திலகர் காந்தி, விநாயகர் போன்றார்.

தேச வீரத்தைத் தீயெழத் தூண்டிச்
 சீமை ஒற்றர் திகைத்திட வந்த
நேச நாட்டு நெப்போலியன் ஐயர்;
 நீண்ட த்யாக நெருப்பெம தையர்.

சொல்லொ ணாப்பெருந் தொல்லைகள் வந்தும்
 சுதந்த ரத்தைச் சுடர்பெறக் காத்தார்;
கல்வி நல்கும் குருகுலங் கண்டார்
 கண்ணைப் போன்றெனைக் காத்தவர்ஐயர்

மலை யருவியில் வீழ்ந்து மறைந்தும்,
 வாழ்கின் றார்அவர் என்னுயிர் வாழ்வில்;
கலை யருவி யுடன்அவ ருக்கென்
 கண்ண ருவியும் காட்டுகின்றேனே.

# 74. சபாஷ் சுபாஷ்

சங்கராபரணம்]	[ஜம்பை

சபாஷ் என உலகெலாம்
ஜனம் வியந்து போற்றிடும்
சுபாஷ சந்திர போஸினைத்
துதிக்க வீரந் துள்ளுமே! (சபாஷ்)

ஜெயஹிந்தென்னும் மந்திரத்தைச்
சிங்கம்போல கர்ஜித்தே
பயந்தனை ஒழித்தனன்
படைகளைத் திரட்டினன் (சபாஷ்)

ஒன்றுபட்ட உள்ளமும்
உறுதியான செய்கையும்
வென்றி மிக்க வீரமும்
விடுதலை தரும் என்றான் (சபாஷ்)

ஆத்திரப் புயல்களால்
அசைந் தகங் குலைந்திடான்
தீத்திரளைப் போலவே
திகழும் சக்தி வீரனே (சபாஷ்)

அல்லல் வந்த போதினும்
அரும்பசி வருத்தினும்
புல்லைத்தின்றும் போர் செயும்
புலிகளைப் படைத்தவன் (சபாஷ்)

# 75. ஜவஹர்லால் நேரு

செஞ்சுருட்டி] [ரூபகம்

முத்தினி லே வந்த வைரமவன்—எங்கள்
மோகன காந்தியின் ரத்னமவன்
சத்தி நிரம்பிய வித்தகனும்—எங்கள்
ஜவஹர் நேருவை வாழ்த்திடுவோம். (முத்)

அச்சத்தைப் போக்கும் மொழியுடையான்—
ஆண்மை கனலும்விழியுடையான் [அவன்
வச்சிரம் போன்ற உடலுடையான்—ஜன
வசிய மான நடையுடையான் (முத்)

தேச விடுதலைச் சிங்கமவன்—தியாகத்
தீயில் புடம்வைத்த தங்கமவன்.
நாசக் கொடும்புயல் சீறிடினும்—அதை
நகைத்து வென்றிடும் சூரனவன். (முத்)

பாரத நாடு விடுபடவே—தன்னைப்
பலி கொடுத்த தலைவனவன்
பாரை யறிந்த புலவனவன்—பொதுப்
பண்புள்ள பூலோக நண்பனவன் (முத்)

ஏழைக் குதவிடும் தோழனவன்—உல
கெல்லாம் புகழ் அறி வாளனவன்
கோழை யடிமைத் துயரைக் குமைத்திடக்
குமுறிப் போர் செய்குரிசிலவன் (முத்)

வீர சுதந்தர பேரியவன்—இந்த
மேதினிக்கே உப காரியவன்
தீரனவன்—பர—சூரனவன்—சர்வ
தேசக் கலையறி நேசனவன் (முத்)

ஊழியிடிகள் உருமிடினும்—சற்றும்
உள்ளந் தளராத வில்லனவன்
ஆழியவன்—அறி—வாழியவன்—உல
காளியவன்—என்றும்—வாழியவே.. (முத்)

## 76. காந்தி தாத்தா

ஹிந்துஸ்தான்தோடி] [ஆதி

தேசத்தி லேபெரிய தாத்தா....நாங்கள்
தெய்வம் எனக்கொண்டாடும் தாத்தா
நேசத்திலே பெரிய தாத்தா—வாழ்க
நிகரில் மஹாத்மாகாந்தி தாத்தா

கூனிக் குறுகியிருந் தாலும்—இளங்
குமரன் என்றுமெங்கள் தாத்தா
வானக் கருமுகிலைப் போலே—எங்கள்
வாழ்வு தழைக்கவந்த தாத்தா

என்பு தெரியமெலிந் தாலும்—அவர்
இமயத்தி னும்பெரிய தாத்தா
அன்பு வடிவான தாத்தா—நாட்டின்
அடிமை விலங்கறுத்த தாத்தா

ஏழைக் கிரங்குகின்ற தாத்தா—எங்கள்
ஏக்கத்தை நீக்குகின்ற தாத்தா
கோழைத் தனம்விடுத்துநாங்கள்—சிம்மக்
கூட்டம்போல் எழச்செய்த தாத்தா

சீமையி லேபடித்த தாத்தா—பெருஞ்
செல்வத் தொழில்புரிந்த தாத்தா
தீமை நலியநலம் பொங்க—சர்வ
தியாகம் செய்த வீரத் தாத்தா

பாழுஞ் சிறையிலடை பட்டும்—கடும்
பட்டினி யிருந்துடலுங் கெட்டும்-நாங்கள்
வாழும் விடுதலைக்கே நோற்ற—தூய
மாதவ ராஜரெங்கள் தாத்தா

தண்டிக்குக் கால்நடையாய்ச் சென்றே-உப்புச்
சட்டத்தை ரத்துசெய்த தாத்தா
எண்டிசை யுலகிலும் இவர்போல்—மஹான்
இல்லையெனப் பேரெடுத்த தாத்தா

பஞ்சடித் திராட்டினத்தில் நூற்றே—தொழிற்
பாடம் புகட்டுகின்ற தாத்தா
துஞ்சா முயற்சியுள்ள தாத்தா—ஒரு
சொல்லால் உலகைவெல்லும் தாத்தா

கோலைப் பிடித்து நடந்தாலும்—தர்மக்
கோட்டையை காத்துநிற்குந் தாத்தா
காலைபோற் சாந்தமுள்ள தாத்தா—நாட்டுக்
கவலை துடைத்தருளுந் தாத்தா

புலம்பித் துடிதுடிக்கு மக்கள்—மனப்
புண்ணைக் குணப்படுத்தும் தாத்தா
விலங்கு வலியை ஆத்மசக்தி—கொண்டே
வெல்லும் விறல்படைத்த தாத்தா

நேட்டால் கடுஞ்சிறையைத் தாங்கிப்—பொது
நீதிக்குப் போர்புரிந்த தாத்தா
மாட்டைப்போல் பாடுபட்டும் வருந்தும்-ஏழை
மக்கள் கண்ணீர் துடைத்த தாத்தா

அஞ்சாத நெஞ்சுடைய தாத்தா—உண்மை
அஹிம்சை விரதங்கொண்ட தாத்தா
நஞ்சான குண்டுவெடித்தாலும்—புன்
னகைத்துப் பொறுத்து வெல்லும் தாத்தா

எளிய வாழ்வுடைய தாத்தா—உடல்
எடுத்த கீதை எங்கள் தாத்தா
தெளிந்த ராமஜபத்தாலே—தெய்வத்
தீச்சுடர் போல்விளங்கும் தாத்தா

தரும வீரரெங்கள்தாத்தா—உப
சாந்த புருஷரெங்கள் தாத்தா
கரும வீரரெங்கள் தாத்தா—வாழ்க
காந்தி மஹாத்மா நல்ல தாத்தா!



# 77. காந்தி வாழ்த்து

நாதநாமக்ரியை] [ஆதி

ஆனந்தக்களிப்பு

வாழிய காந்தி மஹாத்மா—நீடு
வாழிய வான்கடல் வையமும் போலே (வா)

பாரத தேசத்தைக் காத்தான்—இந்தப்
பாரினில் சத்திய ஜோதியாய்ப் பூத்தான்
காரினும் கருணை மிகுந்தான்—அவன்
கண்ணனின் கீதையாய்க் கண்ணெதிர்
[வந்தான் (வா)

பாழும் மடமை யிருளில்—கொடும்
பஞ்சத் துயரினில் பஞ்சையாய் நின்றோம்
வாழும் வகையினைக் காட்டி—எங்கள்
வாதனை தீர மருந்தென வந்தான் (வா)

ஆயுதச் சட்டமோர் பக்கம்—நாட்டில்
அன்புள்ள ஒற்றுமை யில்லாத துக்கம்.
வாயைத் திறந்தாலும் பூட்டு—எம்மை
வாட்டுந் துயர்களை ஓட்டிய தீரன் (வா)

அஞ்சிக் கழுது கலங்கும்—ஏழை
கவலையற் றுண்ணக்கை ராட்டினந் தந்தா
சஞ்சலம் அற்ற அஹிம்சை—என்னும் [ன்;
சஞ்சீவி யால்ஒரு சக்தி பிழிந்தான் (வா)

தன்னை விரதத்தால் வாட்டிப்—பொது
தருமத்தைக் காத்த தயாபரன் காந்தி;
அன்னையின் வேள்விக் கனலில்—தன்
ஆவியினைப்புடம் வைத்தவன் காந்தி.. (வா)

பயம் என்ப தில்லாத பலவான்—ஆட்டுப்
பாலும் பழமும் பசித்திட உண்பான்.
இயற்கை வழியினில் வாழ்வான்—ஐயன்
எல்லோரும் பின்பற்ற நல்லொளி
[யாவான் (வா)

கலியுகம் கண்ட ப்ரஹ்லாதன்—ஜீவ
காருண்ய புத்தன், கனிவுள்ள ஏசு,
மலையினும் மாண்புள்ள வீரன்—அவன்
மன்னுயிர் நன்மைக்கே வாழ்கின்ற தீரன்()

பெரியவன் பேருப காரி—அவன்
பேரை நினைத்தாலே பெய்யும்விண் மாரி.
ஹரிஜன ரக்ஷகன் காந்தி—அவன்
அன்புள்ள சத்திய கர்மவே தாந்தி .. (வா)

ஏட்டில் எழுதிப் படிப்போம்—அவன்
இன்னிசை சொல்லிநாம் இந்தியர்என்போம்
பாட்டுகள் பாடிக் குதிப்போம்—எங்கள்
பாரத காந்தியைப் பல்லாண்டு துதிப்போம்()



# 78. கஸ்தூரிபாய் காந்தி

பீம்ப்ளாஸ்] [தேசாதி

பல்லவி

பத்தினி கஸ்தூரி பாய்—எங்கள்
பாரத தேவியின் உத்தம புத்திரி (பத்)

அநுபல்லவி (தொகையரா)

சத்யாக் கிரஹ மெனும்
சக்தி நமக்களித்த
சாந்த குரு மஹாத்மா
காந்தியின் உயிரான (பத்)

சரணம்

கீதையின் வடிவான கிறிஸ்துவைப் போன்
கிரணம் பரவும் மஹான் [றருள்
மேதினியில் அசுர வேகந்தணி அஹிம்ஸை
விரதம் கடைப்பிடித்தோன்
போதி சத்துவனை புத்தனைப் போன்றவன்,
பூமியி லேபெரியோன்
பொறுமை மிகு காந்தியின் அருமைத் துணைவி
பெருமை பெற்ற தியாகியாம்(பத்) [யாகப்



# 79. காங்கரஸ் கீதம்

பேஹாக் ராகம்] [ஆதி தாளம்

பல்லவி

தேச சுதந்தர தியாகிகள் சங்கம்
திருமிகு காங்கரஸ் ஜயம் ஜயம் பொங்கும் (தே)

அநுபல்லவி

நாசஞ்செய்யும் எம பாசத்தினும் கொடிய
நச்சடிமையைச் செற்ற அச்ச மில்லாத சிங்கம்
(தே)

தொகையரா

திலகர் சரோஜனி, லாலாஜி,
சிதம்பரம் பிள்ளை....
புலவர் ரவீந்திரர், பாரதி, ஐயர்.
மௌலானா அஜாது....
நலமிகு தாதாபாய்; வல்லபாய்
தாஸ், ராஜன், ராஜாஜீ....
உலகறி ஜவஹர்லால். நேதாஜீ சுபாஷ்
உத்தம மஹாத்மா காந்தி....

சரணம்

பாழ்சிறை பட்டினி பயங்க்ரச் சட்டங்கள்
படுமோசக் குண்டுகள்
சுடும்போதும் தளராமல்....
வாழி வந்தே மாதர மந்தரம் கர்ஜித்தே
வானுற ஜயக்கொடி வளம்பெற நாட்டிய ()

இந்து முஸல்மான் பார்ஸி, கிறிஸ்துவர், சீக்கி-
எல்லோரும் சேர்ந்திடும் [யர்,
ஏகரசச் சங்கம்
சந்ததம் பொதுநலச் சிந்தையும் செய்கையும்
தர்மமாகக் கொண்ட கர்மவீரர் சங்கம் ()

# 80. உரிமைத் தொண்டர்

மாண்டு] [திஸ்ர ஏகம்

மனித வாழ்வு புனித மாகவே—எங்கும்
வளமைபொங்கி நாடு வாழுவே
இனியதான தொண்டு செய்குவோம்—இனி
ஏக்கமில்லை அச்ச மில்லையே.

ஆண்மைகொண்ட வீரர் கூட்டம் யாம்—இனி
அடிமைக்கூலி யாக வாழ்வமோ?
கேண்மைகொண்ட தோழர் யாவரும்-இன்று
கீழ்மை தீர மேன்மை சேருவோம்.

பஞ்சையாகப் பிச்சை வாங்கிடோம்—நல்ல
பாடுபட்ட பலனை யுண்ணுவோம்.
கஞ்சச்செல்வர் கால் பிடித்திடோம்—நாம்
கடவுளுக்கும் அடிமை யல்லமே.

அன்னியரின் சந்தை யாகவே—நம்
அன்னை நாட்டை விட்டுச் செல்வமோ?
முன்னுலகை வெற்றி கொள்ளவே—நன்
முயற்சிமேல் முயற்சி செய்குவோம்.

நாட்டிலே விளைந்த துண்ணுவோம்—சொந்த
நாட்டி னுடையே யணிகுவோம்
நாட்டுரிமை ஓங்கி வாழுவே—வாரீர்
நம்முயிரை நல்கி முன்செல்வோம்.

## 81. தெய்வம்

ஆனந்த பைரவி] [ஆதி

தெய்வம் தெய்வ மென்றே—மனிதா
தேடித் திரிவ தேனோ?
மெய்யறிவுத் தெய்வம்—உன்
மேனிக்கோயி லுள்ளே . .

மதமயக்க மேனோ—சாதி
வகுப்பு வாத மேனோ?
இதயந் தொட்டு நின்றால்—தெய்வம்
இருக்கிறேனென் றுரைக்கும் (தெ)

சிற்பி கொத்த னின்றி—நல்ல
திறந்த தூய வெளியில்,
அற்புதமாம் உலகே—தே
வாலயமென் றறிவாய் (தெ)

செம்புங் கல்லு மூன்றி—மணி
சேகண்டிக ளடித்தே,
கொம்பை யூதி னாலும்—வரங்
கொடுப்ப தொன்று மில்லை. (தெ)

புதுமலர் சொரிந்தே—நறும்
புகையும் போட்டதாலென்?
பொதுநலஞ்செய் மனிதா—அதுவே
பூசையாகும் உண்மை. (தெ)

உழைக்குங் கையில் அதுவே—ஈந்
துண்ணும் ஊணில் அதுவே
அழைக்கும் உள்ளத் ததுவே—ஓம்
அன்புத் தெய்வ மாமே! (தெ)

# 82. தேசமும் பாசமும்

செஞ்சுருட்டி] [ஆதி

தேசம் எமதுமனப் பாசம்—அது
தெய்வப் பொலிவுபெற வேண்டும்!
ஓசைக் கடல்முரசம் போலே—இதன்
ஓங்கும் புகழ் முழங்க வேண்டும்

கட்டுங் கவலைகளும் ஒழிய—துன்பக்
கண்ணீருங் கம்பலையுந் தீர
சொட்டும்வேர்வையுடன் உழைக்கும்—ஏழைத்
தொழிலாளர் சுகமுற வேண்டும்!

அதஞ்செய் அடிமைநரகொழியப்—பாழும்
அச்சப் பேய்நடுங்கி யோட
சுதந்தர வீறுபெற வேண்டும்—எங்கள்
சொல்லைச் செயலாக்க வேண்டும்!

கல்விக் கதிர்பரவ வேண்டும்—உயர்
கலைசெய் புலவர் மிக வேண்டும்;
செல்வத் திரள் செழிக்க வேண்டும்—நல்ல
திருக்கள் பெருகிவர வேண்டும்,

போரின் கொடுமைகளைப் போக்க—இந்தப்
பூமியில் அமைதியுண் டாக்க,
பாரத சக்தி யெனும் பரிதி—எங்கும்
பளிச்சிட் டொளிபரவ வேண்டும்!

# 83. இந்துமுஸ்லீம் ஒற்றுமை

பியாகு] [திரிபுடை

ஒற்றுமை யாகநாம் வாழ்வோம்—வாரீர்
ஓர்குல மாகவே வாழ்வோம்!
வெற்றி இறையவன் அளிப்பான்—அவன்
விண்ணொளி தன்னிற் குளிப்போம்!

ஆண்டவன் யாவர்க்குந் தந்தை—நாம்
அன்புள்ள மைந்தர்கள் அன்பீர்!
வேண்டிய தில்லை விரோதம்—சாதி
வேற்றுமை யில்லை குரானில்!

மத்தமதவெறிக் கொண்டே—பிற
மானிட ரைக்கொலை செய்ய
கத்தியெடுப்பவன் அல்லா—தன்னைக்
காயப் படுத்துவோன் ஆவான்.

அன்பையுரைத்திடும் இஸ்லாம்—உள்
அமைதி யுரைத்திடும் இஸ்லாம்
தன்போல் பிறரை மதிக்கச்—சொல்லும்
சத்திய சன்மார்க்க மாகும்.

எந்தவுயிர்க்கும் உயிராய்—நல்
இதயத்தில் வாழ்வது தெய்வம்;
மந்திரத் துள்ளதும் அல்லா—நம்
மசூதியில் உள்ளதும் அல்லா.

# 84. தேசம் ஒன்று.

கரகரப்ரியா] [மிஸ்ரஏகம்

(ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை]

தேசம் ஒன்று தெய்வம் ஒன்று நண்பரே-நம்
தேகத்துள்ள தேகி யொன்றுநண்பரே!
நேசமாக வாழ்ந்திடுவோம் நண்பரே—இனி
நீயு நானு ஜனசமூகத் தொண்டரே! (தேசம்)

அல்லாஹோ அக்பரென்றாலும் ஒன்றுதான்-
[நாங்கள்
அவன் பெரிய சாமி என்னில் ஒன்றுதான்!
எல்லாருக்கும் மேலொரு விதானமே - நாம்
இருக்கும் பூமி யாவருக்கும் தானமே (தேசம்)

ராம் எனத் தொழுபவரும் மாந்தரே - இற்
றஹீம் எனத் தொழுபவரும் மாந்தரே!
ஆமன்என்றுபோற்றுவோரும்மாந்தரே-இந்த
அறிவுண்டாகிற் சண்டையேதுசாந்தரே!(தே)

மதினமா நகரிலே முஹம்மது—ஸல்லம்
வாழ்ந்த வாழ்வை வாழுவோம் மகிழ்வுடன்!—
[நான்
அதிமகிழ்வுடன் குரானை ஓதுவேன்—நீர்
அன்புடனே கீதை கேளும் நண்பரே (தேசம்)



# 85. தேசசேவை

மாண்டு] [மிச்ர ஏகம்

கடமை யென்று தேசசேவை செய்யடா
 கண்ணன் சொன்ன கர்மயோகம் மெய்யடா
மடமையான அடிமை நோய்கள் மங்கவே
 மனித வாழ்வில் அமைதியின்பம்பொங்கவே

மேடை மாலை சூடிடாத போதிலும்—அச்சு
 விளம்பரங்கள் மெச்சிடாத போதிலும்,
நாடு நகர் போற்றிடாத போதிலும்—நீ
 நல்லதை அடக்கமாய் நடத்தடா (கட)

பட்சபாத மானபத்தி ரிக்கைகள்—உன்
 பணிகளை மறைத்து விட்ட போதிலும்....
துச்ச மான போட்டி வந்த போதிலும்,
 தூற்றிடும் பொறாமை சூழ்ந்த போதிலும் ()

காலமுன்னைப் பரிகசித்த போதிலும்,
கடவுளுண்டு தருமமுண்டு காணுவாய்.
ஞாலமுன்னை யறியு நாளும் வருமடா—நம்பு
 நல்ல செய்கை நல்லபயனைத் தருமடா (கட)



# 86. இவரும் அவரும்

**தேசபக்தர்—தேசவிரோதிகள்**

இவர்—தன்னல மற்ற பெரியவர்
அவர்—அன்னியர் சூட்சிக் குரியவர்
இவர்—சுத்த சுதந்திரம் நாடினர்
அவர்—உத்யோக வேட்டைகள் ஆடினர்
இவர்—நாட்டு முன்னேற்றத்தை வேண்டினர்
அவர்—நாட்டினுக்கே குழி தோண்டினர்
இவர்—சிங்கம்போல் ஆண்மையைக் காட்டினர்
அவர்—சிங்காரமாய்க் கொலு நீட்டினர்
இவர்—சிறைகளில் வாடி வருந்தினர்
அவர்—நிறைய விருந்தை யருந்தினர்
இவர்—அடக்கு முறைகளை மீறினர்
அவர்—அடக்குங்கள் என்றின்னுங் கூறினர்
இவர்—படுதுயர் தாங்கி யுழைத்தனர்
அவர்—தடிக்கொண்டு மீதும் அடித்தனர்
இவர்—வந்தேமா தரமென்று கோஷித்தார்
அவர்—சந்தடிச் சாக்கினில் தூஷித்தார்
இவர்—பணத்தைத் துரும்பெனும் த்யாகியாம்
அவர்—பணமே பெரிதெனும் மோகியாம்
இவர்—வரிச்சுமை நீக்க முயலுவார்
அவர்—வரிச்சுமை ஏற்றத் தயங்கிடார்
இவர்—கள்ளென்னும்பேயினைக்கொல்லுவார்
அவர்—கள்ளில் வரும்படி மொள்ளுவார்
இவர்—சுதேசத் தொழில்களைப் பேணுவார்
அவர்—விதேச வுடைகளைப் பூணுவார்

இவர்—ஏழைகள் பட்டினி தீர்ப்பவர்
அவர்—ஏழையைப் பார்க்க தவிர்ப்பவர்
இவர்—தேசக் கொடியை வணங்குவார்
அவர்—தேசக் கொடியைப் பிடுங்குவார்
இவர்—உரிமையைக் காக்கப் போராடினர்
அவர்—துரைகள் சலுகையைத் தேடினர்
இவர்—அடிமை விலங்கை யறுப்பவர்
அவர்—குடிகள் சுயேச்சை வெறுப்பவர்
இவர்—கல்வி தொழில்கள் வளர்ப்பவர்
அவர்—பல் விதமாய் சொத்துச் சேர்ப்பவர்
இவர்—எல்லா நலங்களும் ஆற்றுவார்
அவர்—செல்வச் செருக்குகள் காட்டுவார்
இவர்—வோட்டுகள் கேட்பது நாட்டிற்கே
அவர்—போட்டி சுயநல வேட்டைக்கே
இந்த—தேசபக்தர் குலம் வாழ்கவே
அந்த—தேசத் துரோகிகள் வீழ்கவே!



# 87. நாடு செழித்திடவே

முகாரி] [ஆதி

நாடு செழித்திடவே—கெட்ட
நலிவை யொழித்திடவே
பாடுபட்டுப் பிழைப்போம்—சமப்
பங்குவைத்தே துய்ப்போம்!

உரிமையைக் காத்திடவே—நம்
ஊரினைக் காத்திடவே
அரியநல் லன்பரெல்லாம்—வாரீர்
அருட்பணி புரிந்திடுவோம்!

மலைவளர் அருவியைப்போல்—சுப
மங்கல யாழிசைபோல்
கலைவளர் புலவனைப்போல்—நாம்
களிப்புறச் செயல்புரிவோம்!

அணையுடன் வெள்ளமும்போல்—நல்
லழகுடன் ஆண்மையும்போல்
இணையறு காதலர்கள்—உயிர்
இன்புற நலம் புரிவோம்!

கெடுதலை நீக்கிடுவோம்—நல்ல
கேண்மையுண் டாக்கிடுவோம்;
விடுதலை நாட்டிடுவோம்—ஜய
வீரத்தைக் காட்டிடுவோம்!

# 88. தியாகக் கனல்

புன்னாகவராளி]    [ஆதி

தியாகக் கனல் குளிப்போம்—சு
    தேச விடுதலைக்கே
மோகத்தை முனிந்திடுவோம்—வீர
    முரசினைப் பணிந்திடுவோம்!

நோயெனப் படருகின்ற—பயத்தை
    நூறியெறிந்திடுவோம்,
தாயின் கொடி பிடிப்போம்—சம
    தர்மத்தைக் கடைப்பிடிப்போம் (தியா)

மதிமிகு தொண்டர்களும்,—மன
    வலிமிகு தொண்டர்களும்
நிதிமிகு தொண்டர்களும்—கலை
    நிறைவுறு தொண்டர்களும் (தியா)

வலைகளை வீசுகின்ற—நய
    வஞ்சத்தை மறந்திடுவோம்;
விலையடிமைத் துயர்செய்—கொடு
    விலங்கினை முறித்தெறிவோம் (தியா)

வீட்டினைக் காப்பதுபோல்—நம்
    விழியினைக் காப்பதுபோல்
நாட்டினைக் காத்திடுவோம்—சுய
    நலத்தினை நீத்திடுவோம்! (தியா)

உரிமையை அடைந்திடவே—நம்
    உயிரையும் கொடுத்திடுவோம்!
சரிசம வுணர்வுடனே—வாரீர்
    சகோதர சோதரிகாள்!. (தியா)

# 89. காலப் புயலிலே

புன்னாகவராளி] [ஆதி

காலப் புயலினிலே—தேசக்
கப்பலை நடத்துகிறோம்
ஞாலப் பெருந் தலைவா—அதை
நல்ல துறைசேர்ப்பாய்,

அஞ்சிக் கலங்காமல்—நாங்கள்
ஆண்மையும் கேண்மையுமாய்
துஞ்சறத் துடிப்புறுத்தி—சுத்த
சுதந்தர நிலைபெறவே (கால)

கடுமனப் பாறைகளால்—வீண்
கட்சிப் பொறாமைகளால்;
இடிவசை யம்புகளால்—மன
மிழந்துகை தளராமல் (கால)

மூடக் கொடுமைகளால்—நாங்கள்
மொத்துண்டு தத்தளித்தும்,
ஆடகப் பெருமானே—நின்
அருள்வலி சரணமென்றே (கால)



# 90. நவயுகத் தொழில்

**புன்னாக வராளி]** **[ஆதி**

நவயுகத் தொழில் புரிவோம்—உயர்
நாகரிகம் வளர....
புவியெல்லாம் உண்டுடுக்க—நல்ல
புதுப்புதுக்கலை சிறக்க (நவ)

தேவைக்குப் பஞ்சமின்றி-செல்வத்
திமிர் செயும் வஞ்சமின்றி
யாவருந் தொண்டு செய்யத்-தக்க
யந்திரத் தொழில் வகுப்போம் (நவ)

வீட்டினிலிருந்தபடி—பல
வேலையும் எளிதாக்க,
நாட்டினிற் கலைவளர—இந்த
ஞாலமெல்லாங் கலக்க (நவ)

அருவி-மின் சாரமுடன்—நீர்
ஆவியும் அணுத்திறனும்
கருவியுள் ளியங்கிடவே—நாம்
கணக்கறு தொழில் புரிவோம். (நவ)

விதைத்தறி ராட்டையுடன்—பயிர்
விளை பல கருவிகளும்
வகையறு வண்டிகளும்—அச்சு
வாகன வகை பலவும் (நவ)

வானொளி வான்காட்சி—ரயில்
வங்கம் விமான மெல்லாம்
மாநில மனங்கலந்தே—அன்பு
வளர்ந்திட வகுத்திடுவோம். (நவ)

பகைவரைத் தடுத்திடவே—நாம்
படைக்கலம் படைத்திடுவோம்.
தொகைபெறும் வீரர்களால்—பொதுத்
தொண்டுகள் நடத்திடுவோம் (நவ)

நல்லமுன் னேற்றத்திற்கே—விஞ்
ஞானத்தை ஊக்கிடுவோம்
பொல்லதை யழித்திடவே—மிகப்
புண்ணியஞ் செழித்திடவே (நவ)

எண்மணி இனிதுழைப்போம்—நாம்
எண்மணி கலை வளர்ப்போம்
எண்மணி உடல் வளர்ப்போம்—உலகில்
இயல்புற வாழ்த்திடுவோம். (நவ)



# 91. கதர் வாங்கிடுவீர்

காபி] [ரூபகம்

கதர் வாங்கிடுவீர்—தூய
கதரைக் கட்டிடுவீர்—ஐயா
சுதந்தரம் வருமே—நாடு
தொழில் சிறந்திடுமே! (கதர்)

வேந்தருடுத்தும் கதர்—நல்ல
வித்தகர் கட்டும் கதர்,
காந்தி யணியும் கதர்—இது
கருணைச் செல்வமன்றோ? (கதர்)

வீட்டுக்குச் சேமமுண்டு—தறி
வேலைக்குச் சேமமுண்டு
நாட்டுக்குச் சேமமுண்டு—இந்த
நாகரிகக் கதரால் (கதர்)

தேம்ப லொழிந்திடுமே—நாடு
செல்வம் பொழிந்திடுமே
சோம்ப லொழிந்திடுமே—ராட்டை
சுழன்று பாடிடுமே! (கதர்)

அப்பர் சிவாஜிமுதல்—நம்
ஆன்றோர் அணிந்த கதர்
கப்பல் கப்ப லாக—கடல்
கடந்து விற்ற கதர் (கதர்)

அன்னியக் கொள்ளையினால்—நாம்
ஆக்கம் இழந்துவிட்டோம்!
இன்னும் உறங்காமல்—கரை
யேறிட வேண்டுமையா (கதர்)

பட்டினியால் வருந்தும்—ஏழைப்
பாட்டாளி மக்களுக்கு,
தட்டின்றிக் கஞ்சி தரும்—கற்பகத்
தருவைப் போன்ற கதர் (கதர்)

புண்ணிய மாகுமையா—மனப்
புண்ணை மக் காறுமையா
கண்ணிய மாகுமையா—நாட்டுக்
கைத்தொழி லோங்கு மையா (கதர்)

அன்னையின் கண்ணீரைத்—துடைக்கும்
அன்புக் கதராடை
வன்னக் கதராடை—எளியவர்
வாழுங் கதராடை (கதர்)



# 92. புது வாழ்க்கை

அடாணா] [ஆதி

புதிய வாழ்க்கை வேண்டும்—எங்கும்
பொதுநடஞ்செய் இறைவா—நல்ல
மதிப்பொலிவு வேண்டும்—மன
மடமை நீங்க வேண்டும்.

உள்ளன் போங்க வேண்டும்—உலகம்
ஒன்று சேர வேண்டும்—தூய
பிள்ளை நெஞ்சம் வேண்டும்—பொறாமைப்
பீடையொழிய வேண்டும்.

பொய் யொழிய வேண்டும்—ஆசைப்
போரொழிய வேண்டும்—உலகில்
வெய்ய குண்டுச்சத்தம்—இன்றி
வேதம் பாட வேண்டும்.

ஏசுகிருஸ்தின் அன்பு—முஹம்மதின்
இணையிலாத பக்தி—மணி
வாசகர்தம் ஒருமை—அப்பரின்
மனவுறுதி வேண்டும்.

புத்தர் சாந்த முடனே—கீதை
புகலும் கர்மயோகம்—செய்து
சத்தியச்சன் மார்க்க—நேயந்
தழைக்க வேண்டுகின்றோம்.

# 93 பாட்டாளி உரிமை

மந்தாரி] [திஸ்ர ஏகம்

பாட்டாளீ வா கூட்டாளீ!
பயத்தை விடடா! பஞ்சமில்லை
காட்டைத் திருத்திநாடாக்கும்—உன்
கையை முத்தம் கொஞ்சுகிறேன்...

உலகம் உலகோர் உரிமையடா
உலகச் செல்வம் பொதுமையடா:
பலனும் உழைத்தோர் பாத்தியமே—எனில்
பலரும் பிழைக்கச் சாத்தியமே...

வானம் பொழிய மண் செழிக்க
வணங்கித் தொண்டர் பாடுபட
ஊனும் உயிருந் தழைப்பதடா
உழைப்பவ ருக்கே உலகமடா!

ஆட்டம் பாட்டம் கூத்தென்றே
அட்டகாசச் செலவு செய்வீர்;
தோட்டப் பயிர் செய் தொழிலாளி
துட்டை யிறுக்கிப் பிடிப்பீரோ!

ஓட்டைக் குடிலும் கந்தைகளும்
ஒட்டிய வயிறும் பழங்கூழும்
வாட்டும் பிணியும் வசையிழிவும்
வறுமையும் தொழிலோர் வருந்துவதோ!

பணத்தைப் பூட்டும் படுகருமி
பலரைப் பட்டினி போடுகிறான்
பணத்தைத் தொழில் செய் பண்பாளன்
பலரும் வாழப் பகுத்துண்பான்,

# 94. பாடுபட் டுழைப்போம்

நெற்றி வேர்வை நிலத்தினிற் சொட்ட
நேர்மையாக உழைத்துப் பிழைப்போம்;
கற்றறிவுடன் கைத்தொழில் செய்தே
கவலை யின்றிக் கருத்துற வாழ்வோம்.

கனிவிளைத் தோன் கனியினை யுண்ணக்
காவ லில்லை கடுமையு மில்லை;
இனி யுலகினில் ஏழையு மில்லை;
இடம்பச் செல்வக் கருமியு மில்லை,

பேச்ச ளந்தொரு செய்கையு மற்ற
பேடி கட்குப் பிழைப்பினி யில்லை,
மூச் செலாஞ்செய லாக முன்னேறி
மூதுலகைப் பொன் னாக்க முயல்வோம்.

பூத லோக ககனம் பொதிந்த
புதிய சக்திப் பொருள்களைக் கண்டு
மேதி னியில்விஞ் ஞானப் புலமை
விளக்கி யற்புத வேலைகள் செய்வோம்.

மண் ணுலகினை மங்கல மாக்கி
மாந்தர் வாழ்வை அழகின்ப மாக்கி,
விண்ணு லாவிடு மீனு லகத்தும்
வீடு கொண்டு விளங்கிடு வோமே.



# 95. ஆண்டவன் மக்களெல்லாம்

(நொண்டிச் சிந்து)

ஆண்டவன் மக்க ளெல்லாம்—இந்த
அவனியி லோர்குலம் அனைவருமே
தீண்டத்தகா தவர் யார்?—பர
தெய்வத்தின் கோயிலே தேகமெல்லாம்.
வேண்டிய தில்லையினிச்—சாதி
வேற்றுமைச் சனியனை ஓட்டிடுவோம்;
தூண்டு சுடரினைப் போல்—வீர
சுதந்தரந் துலங்கிய தோழர்களா! (ஆ)

ஆலயச் சாமிகளும்—எங்கள்
அன்பான கும்பிடை அஞ்சிடுமோ?-பாட
சாலையிலே படித்தால்—நல்ல
சாத்திர ஞானமும் தாழ்வுறுமோ?
வேலைசெய் துண்டிடவும்—பொது
வீதியில் நடக்கவுஞ் சாதியுண்டோ?
காலைக்குங் கதிரினுக்கும்—பொழி
காருக்கும் கடலுக்கும் சாதியுண்டோ?(ஆ)

கோயிலிற் கும்பிடுவோம்—கலைக்
கோட்டத்தில் அறிவினை ஊட்டிடுவோம்!
தூயவ ராகிடுவோம்—தேசத்
தொண்டினில் இன்பத்தைக் கண்டிடுவோம்!
நேயர்க ளாயிருப்போம்—பர
நிந்தைய சூயையை நீத்திடுவோம்
தாயக மாநிலத்தில்—சுத்த
சமரஸ சங்கமாய்த் தழைத்திடுவோம்!(ஆ)

## 96. மதுவிலக்குத் தெம்மாங்கு

செஞ்சுருட்டி]    [திஸ்ர ஏகம்

குடியாதே நல்லண்ணே—குடியாதே...
குடியைக் கெடுக்குமடா கள்ளுக்குடி.....
குடியாதே கள்விஷத்தைக்—குடியாதே

*    *    *    *

தெம்பான பதனியுண்டு;
தேட்டான மோரும் உண்டு;
வம்பான கள்ளுச் சனி
மதியைக் கலக்குமடா!    (குடியாதே)

காளி கருப்ப னென்றே
கல்லுக்குப் புட்டி வைக்கும்
மூளை கெட்ட வழிபாடு
மூடப் பழக்கமடா!    (குடியாதே)

கஞ்சிக்கு பெண்டு மக்கள்
கண்ணீர் வடிக்கையிலே,
நஞ்சான கள்ளை யுண்டு
நடுத்தெருவில் ஆடாதே    (குடியாதே)

உடம்புக்கு நல்லதில்லை
உயிருக்கும் நல்லதில்லை;
இடும்பான கள்ளுக்குடி
எமபாசம் போலுமடா    (குடியாதே)

பாடுபட்ட கூலியினால்
பட்டினியைத் தீராது
வீடு முற்றும் பரிதவிக்க
வீச்சத்தில் மகிழாதே    (குடியாதே)

**கைப்பணத்தைப் பறித்துக்கொண்டு**
கலகத்தை மூட்டிவிட்டு
வைப்பாட்டி செருப்படியும்
வாங்கிக் கொடுக்குமப்பா [குடியாதே)

**காலித்தனங்கள் செய்யக்**
கண்செருகிச் செயலுமப்பா
போலீசுப் பாராவிலும்
போடுமடா கள்ளுச்சனி (குடியாதே)



# 97. பெண் உரிமைக் கும்மி

முத்துமுத் தாய்முல்லை பூத்ததடி—ஜகன்
மோகனன் பூங்குழல் கேட்டதடீ,
கத்து குயிலோசை கொஞ்சுதடீ—கலைக்
காதல்வந் துள்ளத்தைக் கெஞ்சுதடி!

விண்ணமு தம்பொழி வெள்ளி நிலாவில்,
விடுதலைக் கும்மி யடித்திடுவோம்.
பெண்ணமு தங்களின் பிறப்பு ரிமையைப்
பேசிக் கும்மி யடித்திடுவோம்!—கால்கள்
வீசிக் கும்மி யடித்திடுவோம்)

பாலிற் கலந்த பசுந்தமிழ்த் தேனெனப்
பண்கள் இசைத்து நடித்திடுவோம்!
காலிற் சிலம்பு கலீர் கலீரெனக்
கைகள் அடித்துக் குதித்திடுவோம்!

கட்டுண்ட வாழ்க்கைவீ ணாச்சுதடி—அந்தக்
காலம் மலையேறிப் போச்சுதடி;
வெட்டிரு துண்டெனப் பேசிடுவோம்—மாதர்
வேற்றுமைப் புத்தியை ஏசிடுவோம்!

காதலுண் டாவதும் பெண்ணாலே—வாழ்வின்
கதை வளர்ந்ததும் பெண்ணாலே;
ஆதர வான மனையறம் பூத்துநல்
அன்பு கனிவதும் பெண்ணாலே!

தீரர் விளைவதும் பெண்ணாலே—கலைச்
செல்வஞ் செழிப்பதும் பெண்ணாலே;
பாரில் அழகும் சுவையும் அமுதும்
பரந்து தழைப்பதும் பெண்ணாலே!

வீட்டிற் கரசியும் பெண்ணன்றோ—வீரர்
விளைந்த கற்பகம் பெண்ணன்றோ?
நாட்டிற் சமப்பங்கு பெண்ணன்றோ—பொது
நல வலக்கரம் பெண்ணன்றோ?

தண்ணீர் சுமக்கவும், சமைத்துப்போடவும்
சந்ததி ஈனவும் வந்திருக்கும்
பெண்ணுக்கு வேண்டாம் பெரிய படிப்பெனும்
பேதமையை இனி ஆதரியோம்!

ஆண்பிள்ளை யென்றுற் களிப்பதும்-பெண்ணை
'ஐயோடீ' என்று சலிப்பதுவும்,
வீண் மனப்பிழை என்று விளம்பிநாம்
வீர சுதந்தரம் கூறிடுவோம்!

செல்வம் இருவர்க்கும் பங்கென்போம்—குல
க்ஷேமம் இருவர்க்கும் பங்கென்போம்.
கல்வி இருவர்க்கும் கண்ணென்போம்—தூய
கற்பும் இருவரின் காப்பென்போம்!

அட்டிலுக்கும், மாட்டுக் கொட்டிலுக்கும்
[அத்தான்
கட்டிலுக்கும், சிறு தொட்டிலுக்கும்
க்ட்டடிமையாகக் கைகட்டி வாழ்ந்திடும்
கதியை மீறிக் குதித்திடுவோம்!

வீட்டுக்குள் ளேயடை பட்டுக் கிடந்தநம்
வீரங் குமுறுதே ஆர்கலிபோல்;
நாட்டில் நிமிர்ந்து நடந்து சுதந்தர
நாத வெளியில் உலாவிடுவோம்!

பொருத்தமில்லாத பொம்மைமணம்-வீட்டைப்
பொட்ட லடிக்கும் வரசுல்கம்,
அருத்த மற்ற சடங்குகள் யாவையும்
அள்ளிப் பழங்குழி தள்ளிடுவோம்!

மூலையைக் காத்திடும் பேச்சுமில்லை—இனி
முக்காடு போட்டிடும் கூச்ச மில்லை....
மாலையும் மஞ்சளுங் குங்குமமும்—புது
மலர் நகையுமாய் வாழ்ந்திடுவோம்!

அல்லியைப்போல் அரசாண்டிடுவோம்-அருள்
ஔவையைப் போற்கவி பாடிடுவோம்,
வள்ளியைப் போல மனங்கொண்ட காதல்
மணாளரை யின்புறக் கூடிடுவோம்!

பேனைப்பிடிப்பதி லும் சலியோம்—சட்டம்
பேசிச் செயிப்பதி லுஞ்சலியோம்,
சேனைதி பத்யத்தி லுஞ்சலியோம்—பெண்கள்
தேசத்தை யாளக்கை வீசிவந்தோம்.

ஆணின்றிப் பெண்ணில்லை; பெண்ணின்றி
[ஆணில்லை;
ஆண்பெண் விளையாட் டுலகமெல்லாம்!
பூணுக்கும் பொன் னுக்கும் பூமிக்கும்
[நெல்லுக்கும்
பொருத்த மெப்படி அப்படி நாம்!

அன்பும் அறிவும்போல் அர்த்தநா ரீசர்போல்,
அல்லியும் நீரும்போல் வாழ்ந்திடுவோம்;
இன்பச் சிகரத்தில் ஏறிடுவோம்—ஆண்பெண்
இரண்டும் ஒன்றெனக் கூறிடுவோம்;

# 98. பெண் சக்தி வணக்கம்

புன்னாகவராளி] [ஆதி தாளம்

பேரின்ப வானத்திலே—ஊறிப்
பெருகிடும் நல் அமுதே....
பாரின்ப வாழ்வு பெற—வந்த
பரசக்தி பெண்மையடா....

செங்கதிர் நகையுடையாள்—சித்தம்
சிலிர்த்திடும் பொலிவுடையாள்
மங்கல மனைவளரும்—ஜய
மஹாலக்ஷ்மி அன்னையடா...

பொங்கிடும் செல்வமெல்லாம்—நல்ல
புத்திர பாக்யமெல்லாம்
தங்க வளங்களெல்லாம்—தருந்
தாயினைப் போற்றிடுவோம்....

கலைதரும் வாணியிவள்—நல்ல
கவிதரும் பாரதியே....
உலகினை அழகு செய்யும்—பெண்
ஒளியினை வணங்கிடுவோம்....

அற்புதச் சிற்பி யிவள்—நம்
ஆருயிர் வாழ்க்கை யெல்லாம்
கற்பனைக் கெட்டாத—மஹா
காவியம் ஆக்கிடுவாள்

அறத்தினை அழிக்க வரும்—கெட்ட
அரக்கரை நொருக்கிடவே
திறத்தினைத் தந்திடுவாள்—கற்புத்
தீயென வளர்ந்திடுவாள்....

தோளுக்குப் பலந்தருவாள்—நம்
சொல்லுக்கு ஜயந்தருவாள்—
வாளுக்கு விசை தருவாள்—புகழ்
வாகைக்கு மணந்தருவாள்...

சிங்கனின் வாளிலே—வீர
சிவாஜியின் தோளினிலே
பொங்கி யெழுந்திருந்தே—துஷ்டர்
பொடிபடப் போர் புரிந்தாள்....

பத்தினி மனமகிழ்ந்தால்—இந்தப்
பாரெல்லாம் மனமகிழும்....
உத்தமி மனங்கசந்தால்—இந்த
உலகெல்லாம் வருந்துமடா....

யாழ்குழல் மத்தளமும்—நல்ல
இன்னிசைப் பாடல்களும்
ஏழ்இசை முழங்கிடவே—இவளை
இன்புறத் துதித்திடுவோம்...

ஓம்சக்தி ஓம் சக்தி ஓம்—என
உண்மையை வணங்கிடுவோம்....
ஓம்சக்தி ஓம் எனவே—பெண்
உள்ளத்தை வணங்கிடுவோம்....

## 99. கலைஞன் யார்?

மானிட வாழ்வை வாடா
  மணமல ரென்னச் செய்து,
தேனினும் இனிய தான
  தீஞ்சுவைக் கவிதை யாக்கி,
ஊனிலே ஆடுகின்ற
  உயிரினை அமுத மாக்கி
ஆனந்தக் கனவில் வாழ்வோன்
  அருங்கலைச் சிற்பியாமே!

கவிதையும் பாட்டும் கூத்தும்
  கவின்பெறு படமுங் காட்டி,
நவரஸம் உருக்கி வார்த்த
  நயங்களைத் துலக்கி நாளும்,
புவியினை அழகு செய்யும்
  புண்ணியக் கலைஞ னாலே
சிவம்பெற மனித வாழ்வு
  தேவவாழ் வாகு மன்றே.



# 100. புதிய கலையுலகம்

செஞ்சுருட்டி] [ஆதி

புதிய கலையுலகம் வேண்டும்—அது
புனிதக் களைநிரம்ப வேண்டும்.
உதய சூரியனைப் போல--அதன்
உள்ளம் அழகுபெற வேண்டும்.

போலிச் சாயமினுக்காலும்—வெறும்
பொய்ப்பல் இளிப்புகளினாலும்—விழி
வேலின் மயக்குகளி னாலும்—காம
வேட்டை யாடுவது கலையோ?

வெள்ளைப் பண மென்னும் பேயால்—பல
வேடத் தளுக்குகளைக் காட்டிக்—கற்பைக்
கொள்ளை கொடுத்துநிதம் குடித்தே-கருங்
குரங்கு போலழகு கெடுவார்....

இந்தத் தீமைகெட வேண்டும்—நம்
இல்லந் திருவிளங்க வேண்டும்.
சந்தத் தமிழ்க்குயிலு மயிலும்—புது
சக்திக் கலையருள வேண்டும்....

பாட்டும் உணர்ச்சியுள்ள பேச்சும்-கதைப்
பண்பும் பரதநடப் பரிசும்
ஆட்டக் கலையரங்கி னாலே—நல்
அறத்தை வளர்த்துவர வேண்டும்.

தேசம் வீறுபெற வேண்டும்—வாழ்வு
சீரும் சிறப்புமுற வேண்டும்.
பேசும் படத்திரையி னாலே—இந்தப்
பெரிய பயன்கள் பெறலாமே...

# 101. புதுவாழ்வு

மங்கலப் பூமணக்கும்
    மறு மலர்ச்சிச் சோலையிலே
செங்கனிவாய்க் குயிலுடனே
    சேவல் வந்து கூவுதம்மா.

குக்கூ குக்கூ குக்கூ
    குக்கூ குக்கூ குக்கூ

சூரியனும் சந்திரனும்
    சுற்றிவரும் பூமியிலே,
போரொழிந்து மக்களெல்லாம்
    புது வாழ்வு வாழ்க வென்றே (குக்கூ)

மதுமயக்கம் போன்றதொரு
    மதமயக்கத் தீமையின்றிப்
பொது நெறியில் எல்லாரும்
    பொருந்தி நலம்பொலிகவென்றே (குக்கூ)

கண்ணிற் கருணையுடன்
    கருத்திற் சமதையுடன்
உண்ணத் தொழிலுடனே
    ஒற்றுமையாய் வாழ்க வென்றே (குக்கூ)

அறிவினைச் சூறாடி
    அணுவெடிக்கப் போராடும்
வெறியின்றிச் சன்மார்க்க
    நெறியினிலே வாழ்க வென்றே (குக்கூ)

அகங்காரப் பித்தமின்றி
    அசுரக் கொடுமையின்றி
சகமெல்லாம் அருளரசாய்
    ஜனசக்தி வாழ்கவென்றே (குக்கூ)

# 102. நாடோடி தில்லாலே!

கட்டுமில்லை கவலை யில்லை தில்லாலே
காற்றுமில்லை புயலு மில்லை தில்லாலே
கொடுமழை வெயிலுமில்லை தில்லாலே—நான்
குஷிபறக்கத் திரிந்திடுவேன் தில்லாலே

மானுடனும் மயிலுடனும் தில்லாலே—எங்கள்
மறுமலர்ச்சிக் குயிலுடனும் தில்லாலே
வானுயரும் புள்ளுடனும் தில்லாலே—நான்
வட்டமிட்டுப் பறந்திடுவேன் தில்லாலே

கூண்டையுடைத் தெறிந்துவிட்டேன்
[தில்லாலே
கொடுங்கோலை முறித்து விட்டேன்
[தில்லாலே
ஆண்டையில்லை அடிமையில்லை தில்லாலே-ஆம்
ஆண்டவனே என்னரசன் தில்லாலே....

மனச்சாட்சி எனது நெறி தில்லாலே—இங்கே
மற்றவரின் சட்ட மில்லை தில்லாலே
கனத்தவரின் அமுலுமில்லை தில்லாலே—என்
கனவரசே சுதந்தரமாம் தில்லாலே

காடோடும் மலையருவி தில்லாலே—இளம்
காற்ருேடும் முல்லைமணம் தில்லாலே
நாடோடி நண்பர்களாம் தில்லாலே—இந்த
ஞாலமெல்லாம் அன்பர்களாம் தில்லாலே.

# 103. இன்ப வெறியாட்டம்

காட்டுக் கனிகளுண்டு
கடிக்கக் கரும்பும் உண்டு
வீட்டுக் கவலையில்லை—நாடெலாம்
விளையாடித் திரிவோமடீ...

ஆடை யுணவுக் கெல்லாம்
அவனியிலே பஞ்சமுண்டு...
வாடை குளிரை யெல்லாம்—தங்கமே நாம்
வாரி யணைவோமடீ...

திக்குத் திகந்த மெல்லாம்—நமக்குத்
தீபாவளிக் கோடியடீ...
எக்களித்துப் பொங்கும் இன்பம்—நல்ல
இட்டிலியும் புட்டு மடீ....

கொடிய நராசுரனைக்
கொன்றுவிட்டான் கண்ணபிரான்.
அடிமைப் பிசாசொழிய—இன்றே
அனுகுண் டடிப்போமடீ...

ஆணுக்கும் பெண்ணுக்கும்-நம்மைப்போல்
அன்புமுடி போட்டுவிட்டால்
வீணுக்குச் சண்டையிட்டு—மாந்தர்
விசனம் பெருகாதடீ....

வகுப்புப் பிரிவினை பொய்
மதவாத பேதமும் பொய்
தொகுப்பாக வாழ்வோமடீ—எல்லாரும்
சுதந்தர வெளியினிலே....

மண்ணெல்லாம் ஆடரங்கம்,
வாழ்வெல்லாம் ஆடலம்மா....
எண்ண மெல்லாம் தீப்பறக்க
இன்பவெறி ஊறுதம்மா....

## 104. கடவுளே

கண்பார் கருணைக்
கடவுளே மாந்தர்படும்
புண்பார்த்துத் தீர்த்துப்
புதுவாழ்வு தந்திடப்பா!

போதும் அடிமைப்
புழுவாய்த் துடித்ததெல்லாம்;
மோதும் கவலை
முறியத் துணை தருவாய்

ஆகாச குண்டால்
அடியுண் டினியுலகு
வேகாத சாந்த
விளக்கொளியைக் காட்டிடுவாய்

பொருள்வெள்ளங் கொள்ளைகொண்டு
புல்லரெம் நாட்டை
இருள் வறுமைக் காடாக்கும்
இன்னலைப் போக்கிடுவாய்.

எத்துக் கடைக்காரர்
ஏமாற்றி டாமலினி,
சத்தியத்தில் ஒத்த
சமவுரிமை தந்திடுவாய்!



# 105. ஆடு திருடும் நரி

ஆடுதிருடும் நரியைப்—போலே
அடிமை செய்யும் பேயே!
நாடு திருட வந்தாய்—போபோ
நாமிந் நாட்டு மக்கள்

பறவைக் கூட்டைக் கலைக்கும்—அந்தப்
பாழுங் குரங்கின் கதைபோல்,
அறமிருந்த நாட்டில்—மீண்டும்
அடிவைக்காதே போடா!

பல்லைக் காட்டி வருவாய்—பின்னே
படைகள் கொண்டு வருவாய்,
தொல்லைசெய்யும் பேயே—உன்
சூழ்ச்சி சாயா திங்கே!

தெரியு முன்னே நெடுநாள்—இந்தத்
திக்கை எட்டிப் பாரேல்.
உரிமை கொண்ட வீரர்—எங்கள்
உயிரும் இந்தியாவே....

மதம்பெருகும் யானை—போல
மல்லெடுத்து வந்தாய்....
சுதந்தரத்தின் சக்தி—முன்னே
தோல்வியுற்று மடிவாய்!

வீரசூரர் இங்கே—என்றும்
விழித்திருக்கக் காணாய்,
பாரதத்தின் சக்தி தன்னைப்
பணிந்து பின்செல் பதரே!

இரும்புங் குண்டுங்கொண்டே—நீ
எம்மை வெல்ல வந்தாய்—இங்கே
தரும சக்தி யுண்டு—அதைத்
தஞ்சம் புகுந்து போபோ!

## 106. போர்ப்பேயும், பேராசையும்

**பேராசை:**—உலகமெல்லாம் கட்டியாளக்
கலகம் செய்தேனே—தம்பீ!
கலகப் பூதம் என்கழுத்தில்
கத்தி வைத்ததே!.

**போர்:**—ஆசைகொண்டு காசினியை
நாசஞ் செய்தேனே—தம்பீ,
தேசதேசம் வைத்த தீயுந்
திரும்பிச் சூழுதே!

பாய்ந்தெழுந்த படைவெறியும்
படுத்து விட்டதே—தம்பீ
காய்ந்து வென்ற நாடு நம்மைக்
கடிந்து வெல்லுதே.

**பேராசை:**—கண்டகண்ட அண்டப் புளுகு
கட்டிவிட்டேனே—என்
வண்ட வாளம் சந்தி சிரிக்க
வம்பு பேசுதே!

**போர்:**—பழைய தருமக் கோட்டை தன்னைப்
பாழ் படுத்தவே—நானும்
மழையைப் போலக் குண்டுவீசி
மகிழ்ந்து நின்றேனே!

**பேராசை:**—அலியென் றுண்மை யறத்தைக்கேலி
யாக்கி வைத்தேனே!—அது
புலியைப்போலப் பாய்ந்தென் செருக்கை
புடைத்துத் தின்றதே!

**போர்:**— நல்ல நல்ல ஊரையெல்லாம்
நாசஞ் செய்தேனே—என்
பல்லுடைக்கச் சம்மட்டியும்
பாய்ந்து வந்ததே!

**பேராசை:**—பல்லுடைந்த வெட்கக்கேட்டைப்
பசப்பிவிட்டேனே—அண்ணை
தில்லு முல்லுக் கதைகளெல்லாம்
திரித்து விட்டேனே!

**போர்:**—கதை திரித்த காலமெல்லாம்
கடந்து போனதே—தம்பீ
உதைபொறுக்க முடியவில்லை
உயிர் துடிக்குதே!

காந்த வெடியும் பறக்கும் வெடியும்
கடிது விட்டோமே—அவை
தேய்ந்த கரியை நம்முகத்தே
தேய்த்து விட்டாரே!

கண்ணி வைத்துப் புண்ணியத்தைக்
கௌவி யுண்டோமே—அது
மண்ணை வாயிற் போட்டு நம்மை
மாய்த்து விட்டதே!

**பேராசை:**- வதைவெடிகள் அற்றபோதும்
வாய்வெடி யுண்டே—உன்
உதட்டுமீசை ஒட்டுமண்ணை
உதறி நில்லடா!

**போர்:**—செருவெறிக்கு மூன்று பக்கந்
தீப்பி டித்ததே—தம்பீ,
கருமப் போரை விட்டெத் தேசம்
கம்பி நீட்டுவோம்!

**பேராசை:**—தரையு மில்லை வானு மில்லை;
தங்கு நம்மிடம்—அண்ணா
நரக முண்டு; நமது சாத்தான்
நட்பு மங்குண்டே!

**போர்.**—இந்தியாவை எளிய தேசம்
என்றி ருந்தேனே; — இனி
அந்த நாட்டைஅமர தேயம்
ஆமென் றறிந்தேனே!



# 107. வெற்றிச் சங்கு

குந்தலவராளி] [திஸ்ர ஏகதாளம்

பல்லவி

ஓம் சாந்தி சாந்தி யென்றே
ஊது வெற்றிச் சங்கமே (ஓம்)

அநுபல்லவி

சேம மாகப் பூமி யெங்கும்
சேர்ந்து நன்று வாழவே (ஓம்)

சரணம்

எல்லையற்ற நாடெலாம்
இரத்த வெள்ள மாக்கியே
தொல்லை செய்த பேயரக்கர்
தோல்வி யுற் றழிந்தனர். (ஓம்)

நகர்களை அரைநொடி
நரகச் சாம்ப லாக்கியே
தகர்சினப் படைக்குலம்
சரண்புகுந்த நாளிதே (ஓம்)

நிலத்தும் வானும் நீரிலும்
நெருங்குயிர் நொருங்கவே
கொலைக்க ளங்கள் ஆக்கிய
கொடூரப்போர் குமைந்ததே (ஓம்)

அன்பு கொண்ட நேயராய்,
அறிவு மிக்க தூயராய்,
மன்பதைகள் இன்ப மாக
வாழ்க வாழ்க வாழ்கவே (ஓம்)

சமரச சன்மார்க்கமே
சமயமாய் உலகெலாம்
அமைதியாக வாழவே
அருள்செய் சுத்த சக்தியே (ஓம்)

க

# 108. வல்லரசு

புன்னாக வராளி] [ஆதி

வல்லர சானதுவே—நீடு
வாழிய பாரதமே!
வெல்லர சானதுவே—என்றும்
வாழிய வீரநிலம்! (வல்)

இலங்கை முனை முதலே—
இமாலய முடி வரைக்கும்
இலங்கிடுங் கதிர்க்கொடியை—நாட்டி
இந்துசு ராஜ்யமென்றோம்! (வல்)

இந்திய மக்களெல்லாம்—எந்த
இனத்தவ ராயிடினும்,
இந்தியரென உணர்ந்தோம்—இதில்
இருமனப் பிரிவில்லையே! (வல்)

பொதுஜன சம்மதமே—நாட்டைப்
பொதுஜன நலங்கருதிப்
பொதுவுறப் போற்றுகின்ற—ஒரு
புதுயுகந் தோன்றியதே! (வல்)

யார்நம்மை யடிமைசெய்வார்?—இனி
யார்நம்மை அடக்கி வைப்பார்?
பாரினில் ஆத்ம சக்தி—பெற்ற
பாரத வீரர்கள்யாம்! (வல்)

கொட்டுக ஜயபேரி—மணிக்
கொடியினை ஏற்றுகவே
எட்டுக நமது புகழ்—அந்த
இந்திர னுலகிலுமே!.... (வல்)

# 109. எழுந்தருள்

பூபாளம்] [சாபு

எழுந்தருள் எழுந்தருள் இன்பச் சுடரே
எங்களைக் காத்திடும் மங்களக் கதிரே
அழுந்திருள் பிளந்திடும் அறிவொளி வீசி
அமரவாழ் வளித்திடும் அமுதப் பிழம்பே
எழுந்திராய்

ஒள்ளிய சின்மய உருவினைக் காட்டி,
"ஓமெனு" மந்திர வீணையை மீட்டி,
தெள்ளிய உபசாந்தந் தித்துள்ளூறத்
திவ்விய சுதந்தர வரந்தருந் தேவீ—
எழுந்திராய்

ஞானில முற்றிலும் வானர சாட்சி
நல்கிட நல்லன பல்கிடத் தாயே
ஆனந்த கீதமென் றுக்கியென் வாழ்வை
அருள்மணம் பரப்பிநல் லன்பரைக் காக்க—
எழுந்திராய்



# 110. கூற்றினி யுண்டோ?

பாசு] [ஜம்பை

பல்லவி

கூற்றினி யுண்டோ—விடுதலை
கூடி அதர்மத்தைச் சாடிய தீரர்க்குக்
கூற்றினி யுண்டோ—சக்தி
குண்டலித் தீயெழக் கண்ட புனிதர்க்குக்
கூற்றினி யுண்டோ—பகை,
குண்டு துப்பாக்கி யுடலைத் துண்டாக்கி
[னும் (கூ)

அநுபல்லவி

தேற்ற முடையார்—சு
தேசமும் தர்மமும் சீர்பெற த்யாகஞ்செய்
ஆற்றலுடையார்—அவர்
அன்னைத் தடுத்திடும் துன்பச் சுழ
[லுண்டோ (கூ)

சரணம்

கட்டற்ற வீரர்—நரக்
காய மழியினும் தூயவுயிர்க்கனல்
வெட்டினும் போமோ—தேகம்
வீழினும் எந்நாளும் வாழும்சுத் தாத்துமா
கட்டுற்றுச் சாமோ—அந்தக்
கரணத்திலே யது காணக்கிடைத்தவர்
காலத்தை வென்றார்—வீசுங்
காற்றிலும் மண்ணிலுங் கலந்தென்றும்
[வாழுவார் (கூ)

# 111. தாய் வணக்கம்

பிலஹரி] [ஆதி

போற்றி போற்றி பராசக்தி தாயே!
புதல்வர் செய்திடும் பூசனை கொள்வாய்
ஆற்றலும் அறிவுந் திரு ஓங்கும்
ஆத்ம சக்தியும் ஆயுளும் ஈவாய். (போ)

அன்னை ஓம் சக்தி என்கிற போதே
அமுதம் ஊறுமெம் ஆவி னுள்ளே.
மின்னைப் போல உன் அன்புமின் ஸாரம்
வினையின் வெற்றி விளக்கிடுந் தாயே. ()

சிங்க நெஞ்சும், சிலையெனத் தோளும்,
தீரவீர பராக்ரம வாழ்வும்,
தங்க மேனியும் சத்திய வாக்கும்,
தரும சித்தியும் தந்தெமை யாளாய். ()

எங்கு நோக்கினும் உன்முகங் காணும்
இன்பம் வேண்டும்; இதயவிளக்கே
பொங்கும் ஆனந்தப் புன்னகைத் தேனே!
பூங்கை ஆசி பொழிந்தெமைக் காவாய்! ()



## 112. புது யுகம்

வெள்ளி வெளுத்ததம்மா—எங்கும்
வெண்சங்கம் ஊதுதம்மா
துள்ளிவரும் வசந்தம்—சுப
சோபனம் சொல்லுதம்மா

வண்டிறைக்கும் மலரில்—புது
வாசம் வருகுதம்மா
சண்டை வெறியடங்கி—நல்ல
சாந்தம் பரவுதம்மா

ஞானக்கதிர் பொலியும்—தெய்வ
ஞாயிறு வந்ததம்மா
மோனத் திறமையினல்—அது
மூவுல காண்டதம்மா

துச்சமனப் பிழைகள்—எல்லாம்
தூருடன் சாய்ந்தனவே
அச்சம் ஒழிந்ததம்மா—அறி
வானந்த வாழ்க்கையினல்.

பொதுநிலை வந்ததம்மா—மதப்
போர்கள் ஒழிந்ததுமே
புதுயுகம் பூத்ததம்மா—பரி
பூரண யோகத்தினல்.



# 113. கண்டேன்

(திருத்தாண்டகம்)

தேனோங்குஞ் சோலைவளம் செழித்த நாடு
திருவோங்கும் தெய்வசபை யாகக் கண்டேன்
வானோங்க ஜயமுரசம் வாழ்த்தக் கண்டேன்
வன்னமணிக்கொடியெங்கும்வளரக்கண்டேன்
மானோங்குங் கண்ணாரும் வாகை யோங்கும்
மார்புடைய வீரர்தமை மருவக் கண்டேன்
ஊனோங்கும் உயிர்க்குலங்கள் உளஞ்சிலிர்க்க
உள்ளான்ம நேயத்தின் ஒருமை கண்டேன்!

இடையேவந் திடர்செய்த இருளின் கூட்டம்
இரவியின்முன் பனிபோலே ஏகக்கண்டேன்
தடைகளெல்லாம்தவிடுபொடியாகக்கண்டேன்
தாராளச் சுதந்தரமே தழைக்கக் கண்டேன்;
மடமைபிணி வறுமைதுயர் மாறக் கண்டேன்
மனைதோறும்கல்விதொழில்வளரக்கண்டேன்
கொடியகொடுங் கோலெல்லாம் குமையக் கண்
[டேன்
குலமொன்றாய்மாந்தரெலாம்குலவக்கண்டேன்

சிங்கத்தைக் குகையினிலே செயித்த தீரர்
தேசத்தின் சேமத்தை வகிக்கக் கண்டேன்,
வங்கத்தை உடைக்கவந்த திமிங்கிலங்கள்,
வகையின்றி வந்த வழி செல்லக் கண்டேன்,

தங்கத்தை யொத்த குணத் தருமவான்கள்,
சட்டஞ்செய் பொறுப் பெல்லாந் தாங்கக்கண்-
[டேன்,
பங்கமெலாம் விலகி நலம் பொங்கக்கண்டேன்
பாரெல்லாம் பரமனருளாட்சி கண்டேன்.

ஆறுற்ற கடலெனவே சமயவாதம்
அத்தனையும் அருளுணர்வில் அடங்கக்கண்டேன்
வீறுற்ற சிந்தாந்த விளக்கங் கண்டேன்,
வேதாந்தக் குடியரச விளங்கக் கண்டேன்
வேறுற்ற மனமயக்க வினைக ளற்றே,
விரிந்தசம ரசமெங்கும் விரவக் கண்டேன்
பேறுற்ற நற்காலம் பிறங்கக் கண்டேன்
பிறந்தபயன் இதுவென்னப்பெற்றேன் யானே



# 114. பொது நெறி

ஒன்றுபட்ட உள்ளமும்
உயிர்க்குயிர் கருணையும்
நன்றுமிக்க செய்கையும்
நலிவிலாத சக்தியும்

என்றுமுன் அருளுடன்
இணைந்து வாழும் இன்பமும்
வென்றுலகை யாளுகின்ற
வீறுந்தா பரமனே!

சள்ளையற்ற சாந்தமும்
சமரஸ வுணர்ச்சியும்
கொள்ளையற்ற செல்வமும்
கொடுமை யற்ற நீதியும்

எள்ளலற்ற சீர்மையும்
எமனும் அஞ்சுந் திண்மையும்
கள்ளமற்ற வாய்மையும்
கடவுளே கொடுத்தருள்!

இரும்புபோல் உடலமும்
இனிய ஆன்ம நேயமும்
கரும்புபோலச் செஞ்சொலும்
கணக்கிலாத போகமும்

எரும்புபோல் முயற்சியும்
சுரண்டலற்ற நேர்மையும்
அரும்பவிழ் மலரைப்போல்
அழகுமீந் தருளுவாய்!



## 115. தியானம்

சிந்துபைரவி] [தேசாதி

நித்திய மாகிய
சத்தியப் பொருளே
சுத்தசு தந்தர
சக்தியும் சரணம்! (நி)

வான்குடை நிழலில்
வாழுயிர் யாவையும்
ஆனந்த மாகிநின்
அன்பினில் ஓங்குக! (நி)

பஞ்சபூ தஞ்செயும்
பஞ்சரக் கிளிபோல்
நெஞ்சினி லேவளர்
நேயமாச் சோதியே (நி)

அன்னைநீ, தந்தைநீ;
அன்புடன் ஆருயிர்
உன்னருள் ஆட்சியில்
ஒன்றுபட் டோங்குக! (நி)

அந்தண வுள்ளமும்
ஆற்றலும் வீரமும்
பந்தமில் சிந்தையும்
பக்தருக் கீந்தருள் (நி)

சீரிய செய்கையும்
செல்வமும் கல்வியும்
பூரண யோகமும்
போகமும் தந்தருள். (நி)

சூரியன் போலெங்கள்
பாரத தேசமும்
பாரெலாம் பேரின்பம்
பாலித்து வாழ்கவே! (நி)

**யோகி ஸ்ரீ சுத்தானந்த பாரதியாரின்**
**தேசிய கீதம் முற்றிற்று.**